# இராமேசுவரத் தலவரலாறு

ஆக்கியோன்

G. கலியாணம், M.A.,

ஆசிரியர் "திருக்கோயில்" அறநிலையத்துறை, சென்னை.

வெளியிட்டோர்

திரு. R. சண்முகராஜேசுவர நாகநாதசேதுபதி
அவர்கள் M.L.A, இராமநாதபுரம்.

திரு. A. S. சுப்பராஜ் அவர்கள் M.L.A.,
போடிநாயக்கனூர்.

திருமதி ஜோதிவெங்கடாசலம் அவர்கள் M.L.C.
சென்னை.

அறங்காவலர்கள்.

திரு. V. சுந்தரராஜன், பி.ஏ., பி.எல்.
இறைபணியாளர்.

இராமேசுவரம் தேவஸ்தானம்



இராமலிங்கப் பிரதிஷ்டை

# அணிந்துரை

நமது பரத கண்டத்தில் காசியையும் இராமேசுவரத்தையும் தலைசிறந்த புனிதத்தலங்களாக மக்கள் போற்றுகின்றனர். காசிக்குச் செல்வோர் தங்களுடைய யாத்திரையை இராமேசுவரத்துக்குச் சென்றே முடித்துக்கொள்வது நம்நாட்டு மரபு, தென்னாட்டிலிருந்து மக்கள் காசியாத்திரை செய்வதுபோலவே வடநாட்டினர் தொன்றுதொட்டு இராமேசுவரத்துக்கு வந்துகொண்டேயிருக்கிறார்கள். ஆத்மீகத்துறையில் பாரததேசத்தின் பல்வேறு பாகங்களிலுள்ள நாட்டுமக்களும் ஒன்றுபட்டிருப்பதை காசி இராமேசுவர யாத்திரை நன்கு விளங்கும் முறையில் அமைந்துள்ளது. காசியில் இராமநாம மகிமையும் இராமேசுவரத்தில் இராமனாலேயே பிரதிட்டை செய்யப்பெற்ற சிவலிங்கமும் அனுமனால் கொண்டுவரப்பெற்ற காசி சிவலிங்கமும் அமைந்திருப்பதும் கோதண்டராமசுவாமி கோயில் ஒன்று இராமேசுவரம் கோயிலோடு இணைக்கப்பெற்று நிர்வகிக்கப்பெற்று வருவதும் இந்து சமய சமரசத்தைக் காட்டுகிறது. இராமேசுவரம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றினாலும் பெருமை பெற்றது. இந்த மகிமை பெற்ற பதியை இந்திய நாட்டின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் நாள்தோறும் வந்து வழிபடுகின்றனர். யாத்ரீகர்களுக்கு உதவியாக இருக்கும் வகையில் தலவரலாலொன்று அச்சிட்டு வெளியிடும் தேவஸ்தானத்தாரின் முயற்சி பெரிதும் போற்றத்தக்கது. பல நூல்களிலிருந்து செய்திகளைத் திரட்டித் தொகுத்து இந்த நூலை எழுதியவர் முன்னாள் இராமநாதபுரம் மாவட்டத்தில் தாசில்தாராக இருந்தவரும், இந்நாள் அரசாங்க அறநிலையத்துறை வெளியீடான "திருக்கோயில்" என்னும் இதழின் ஆசிரியராக இருப்பவருமான திரு. G. கலியாணம் பிள்ளை, எம்.ஏ, ஆவர். அன்னாருக்கும், இந்நூலை வெளியிடும் தேவஸ்தான தருமகர்த்தர்கள், இறைபணியாளர் முதலியவர்களுக்கும் தமிழுலகமும் சைவ உலகமும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது. இந்த நூலை அழகாக விரைவில் அச்சிட்டுத் தந்த "பாரி அச்சகம்" உரிமையாளர், திரு மு. நாராயணன் அவர்களின் தொண்டு மிகவும் பாராட்டத்தக்கது. இது போன்ற நூலை ஆங்கிலம், இந்தி முதலிய மொழிகளிலும் வெளியிட்டால் இந்திய நாட்டு மக்கள் எல்லோருக்குமே பயன்படும்.

அ. உத்தண்டராமன், ஐ.ஏ.எஸ்.,

ஆணையாளர், அறநிலையத்துறை, சென்னை.

# பொருளடக்கம்



•

## பிற்சேர்க்கை

•



இராமேசுவரம் கோயில் கீழக்கோபுரம்

உ

சிவமயம்

# இராமேசுவரத் தலவரலாறு

## விநாயகர் வணக்கம்

திங்களங் குழவியென்னத் திகழொரு மருப்பிற்சோதி
தங்குகிம் புரிவயங்கத் தடாமணி மகுடந்தாங்கித்
துங்கநல் வரங்கணல்குந் தூய சீரிராமசேதுப்
புங்கவர் வணங்கும்யானை முகத்தனைப் போற்றல் செய்வாம்.

மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

## 1. தலமும் இருப்பிடமும்

இமசேது பரியந்தம், காசி இராமேசுவரம் வரை என்று தொன்றுதொட்டு நம்நாட்டில் பேச்சுவழக்கு உண்டு. புண்ணிய தீர்த்தமான சேதுவையும், மகிமை பெற்ற தலமான இராமேசுவரத்தையும் புகழ்ந்து கூற எழுந்தவையே அப்பழமொழிச் சொற்கள். இராமேசுவரம் பாரத நாட்டு மக்கள் அனைவராலும் கொண்டாடப் பெறும் பழம்பதி. தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டிலே தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் பதினான்கு. அவை,

கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடக நெல்வேலி இராமமேசம்—ஆடானை
தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன் கொடுங்குன் றம்பூ வணம்

என்பன. அவற்றிலொன்று இராமேசுவரம் என்னும் சிவப்பதி. இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து நாள்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து வழிபடுகின்றனர். இந்த புண்ணியத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தின் தென்கிழக்குக் கோடியில் உள்ள இராமேசுவரம் என்னும் தீவின் வடபால் அமைந்துள்ளது. மதுரையிலிருந்து சுமார் 100 கல் தொலைவிலுள்ளது. இராமநாதபுரத்திலிருந்து 33 கல் தூரத்திலிருக்கிறது. வடக்கே சென்னையிலிருந்து வருபவர்கள் திருச்சிராப்பள்ளி—காரைக்குடி—மானமதுரை வழியாக வரவேண்டும். மதுரையிலிருந்தும் மானமதுரை வழியாக இராமேசுவரத்தை யடையலாம். பாம்பன் கால்வாயை இருப்புப்பாதைப் பாலத்தின் மூலமாகவே கடந்து தீவை அடையவேண்டும். இராமநாதபுரத்திற்குக் கிழக்கேயுள்ள மண்டபம் என்ற ஊர்வரையில் நல்ல கற்சாலை இருக்கிறது. அதுவரையில் மோட்டார் வண்டிகளில் போகலாம். அதற்குமேல் இருப்புப்பாதை வண்டியிலேறியே இராமேசுவரத்துக்குப் போக முடியும். பாம்பன் என்ற சந்திப்பில் வண்டி மாற்றவேண்டும். தீவின் வடபக்கத்தில் கடல் ஓரமாக இராமேசுவரம் ஊரும் திருக்கோயிலும் அமைந்திருக்கின்றன. இராமேசுவரத்துக்கு தேவநகரம், தேவை என்ற பெயர்களும் உண்டு. இராமேசுவரம் தீவு திருமாலின் வலம்புரிச்சங்கின் வடிவம்போல் இருக்கிறது.

## 2. தலப்பெருமை

பாரத நாட்டின் எல்லாப் பாகங்களிலிருந்தும் மக்கள் சென்று வழிபடும் சில பதிகளில் இதுவொன்று. வட இந்தியர் நம்முடைய நாட்டில் நான்கு தலங்களையே மிகச் சிறந்ததாகக் கருதுகின்றனர். அவை வடக்கே **பதரிநாதம்**, கிழக்கே **ஜகந்நாதம்**, மேற்கே **துவாரகநாதம்**, தெற்கே **இராமநாதம்** என்பன. இந்த நான்கில் முதல் மூன்றும் வைணவத்தலங்கள் வடநாட்டிலுள்ளன. **இராமநாதம்**

ஒன்றே சிவத்தலம். அதுவும் தமிழ்நாட்டிலுள்ளது. பன்னிரண்டு ஜோதிர்லிங்க க்ஷேத்திரங்களுள் ஒன்று இராமேசுவரம் என்ற பெருமையுமுடையது. மற்றவை ஓங்காரேசர், சோமநாதர், திரியம்பகநாதர், மல்லிகார்ச் சுனர், நாகநாதர், வைத்தியநாதர், காசிவிசுவநாதர், பீமேசர், கேதாரேசர், மகாகாளேசுவரர், குசுருணேசர் என்ற ஜோதிர் இலிங்கங்களாகும். இங்கே கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இராமநாதப் பெருமானுக்குக் கங்கையிலிருந்து கொண்டுவரப்படும் தீர்த்தம் நாள் தோறும் அபிஷேகம் செய்யப்படும் தனிச் சிறப்புடையது.

இராமபிரான், இலங்கையில் இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்றுவிட்டு, சீதாதேவியை மீட்டுக் கொண்டு இராமேசுவரம் தீவிலுள்ள கந்தமாதனபர்வதத் தில் வந்து தங்கினர்; அரக்கர்களைக்கொன்ற பாவம் தீர சிவலிங்கப்பிரதிஷ்டை செய்ய எண்ணினர்; அனுமனை அழைத்துக் கயிலாயம் சென்று சிவலிங்கம் கொண்டுவர ஆணையிட்டார்; மாருதியும் அவ்வாறே சென்றார். போனவர் திரும்பிவரக்காலம் தாழ்த்தது. நல்ல வேளையில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டி யிருந்தபடி யால் சீதாதேவியால் மணலால் பிடிக்கப்பட்ட இலிங் கத்தை நிலைபெறுத்திப் பூசைசெய்தார். அந்த இலிங்கமே இராமலிங்கர், இராமநாதர், இராமேசுவரர் என்றும், அதனு லேயே அவ்வூருக்கு இராமேசுவரம் என்ற பெயர் உண்டாயிற்றென்றும் கூறப்படுகிறது. அனுமான் கொண்டுவந்த இலிங்கம் இராமலிங்கத்திற்கு வடபால் உள்ளது; விசுவேசுவரர், காசிலிங்கம், அனுமலிங்கம் என்று அதற்குப் பெயர்கள் வழங்குகின்றன. ஆராய்ச்சி அறிஞர்கள், இராமாயணத்தின் காலம் கி. மு. மூன்ருவது நூற்ருண்டாக இருக்கவேண்டுமென்று கருதுகின்ருர்கள். எனவே, இராமபிரானல் நிறுவப்பட்ட இத்தலம் மிகமிகப் பழமை வாய்ந்த தென்பதற்கு ஐயமில்லை. இலங்கை யரசனான பராக்கிரமபாகு என்பவன் பாண்டிய நாட்டின்

மேல் படையெடுத்துவந்து, அவன் வெற்றிக்கறிகுறியாக இராமேசுவரத்தில் கி, பி. 1173-ல் நிச்சங்கேசுவரருக்கு ஒரு கோயில் எடுத்ததாக இலங்கையிலுள்ள தம்பாலா என்ற ஊர் கல்வெட்டுக் கூறுகிறது

## 3. திருக்கோயில் அமைப்பு

சங்குவடிவமாக அமைந்துள்ள இராமேசுவரம் தீவின் வடகிழக்கே கடல் அருகே திருக்கோயில் அமைந்திருக்கிறது. இராமேசுவரம் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து அரைகல் தொலைவிலுள்ளது. இராமநாதர் சந்நிதி கிழக்கு நோக்கி யிருக்கிறது. வெளியூரிலிருந்து வருகிறவர்களுக்கு முதலிலே தென்படுவது மேற்குக் கோபுரவாயில் தான். கோயிலைச்சுற்றி நான்கு தேரோடும் தெருக்கள் இருக்கின்றன. நான்கு பக்கமும் கோயிலுக்கு வாயில்கள் உள்ளன கிழக்கே சுவாமி சந்நிதிக்கும், அம்பிகை சந்நிதிக்கும் நேராக இரண்டு வாயில்கள் இருக்கின்றன. இராமநாதர் சந்நிதியின் நேருள்ள கிழக்குக் கோபுரம் கடலை நோக்கி நிற்கிறது; 126 அடி உயரம். மேற்குக் கோபுரம் 76 அடி உயரமுடையது.

கிழக்குக் கோபுர வாயில் வழியாக கோயிலுக்குள் நுழையும்போது வலதுபுறம் ஆஞ்சநேயர் சந்நிதி இருக்கிறது. அவர் தென்முகநோக்கியிருக்கிறார். அவருடைய திருமேனி சிவந்த நிறமாகக் காட்சியளிக்கிறது. இங்கு வைணவர் பூசனை செய்கிறார். அனுமாரைச் சேவித்தபின் அனுப்பு மண்டபத்தின் வழியாகப்போய்க் கொடிமரத்தை அடையலாம். அங்கு சுதையினாலான பெரிய நந்தியிருக்கிறது. அதன் இருபுறமும் மதுரை நாயக்க மன்னர்களான விசுவநாதநாயக்கர், கிருஷ்ணமநாயக்கர் இவர்களுடைய உருவச்சிலைகள் இருக்கின்றன. இங்கிருந்து உள்ளே நுழைவதற்குள்ள வாயிலின் இருபுறத்திலும் கணபதி, முருகன் இவர்களுடைய சந்நிதிகள் கிழக்கு நோக்கி யிருக்கின்றன. இவர்களை வணங்கியபின் உள்ளே

சென்று முதற் பிரகாரத்தையடையலாம். இந்தப் பிரகாரத்தின் தென்கிழக்குப் பக்கம், சூரியன், உஷா, பிரத்யுஷா, சகஸ்ரலிங்கம் இவர்களின் திருவுருவங்கள் உள்ளன. கர்ப்பக்கிரகத் தென்சுவரில் இறைவன் திருக்கயிலாயக் காட்சி—மேலே ஐந்தலைநாகம், கீழே எல்லாவற்றையும் ஆமைதாங்குகிறது — அற்புதமான சிற்பம். தெற்குப் பிரகாரத்தில் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், அறுபத்துமூன்று நாயன்மார்கள் (உற்சவர், மூலவர்) விக்கிரகங்கள் இருக்கின்றன. மேற்குப் பிரகாரத்தில் வச்சிரேசுவரர், மனோன்மணி, கந்தன், சங்கரநாராயணன், அர்த்தநாரீசுவரர், கங்காளநாதர், சந்திரசேகரர் முதலியவர்கள் எழுந்தருளியுள்ளனர். வடக்கு முதற் பிரகாரத்தில் ஏகாதசருத்திரர்—11 இலிங்கங்கள், விசாலாட்சி, ஜோதிர்லிங்கம், நடராஜர் சந்நிதிகள் இருக்கின்றன. இராமர், இலக்குவர், சீதை, அனுமன், விபீடணன், சுக்கிரீவன், அங்கதன், சாம்பவான், நளன், நீலன், இந்திரன் முதலிய பதினொருவரும் நிலைபெறுத்திய பதினொரு இலிங்கங்களும் மிகவும் முக்கியமானவையாகக் கருதப்படுகிறது. ஜோதிர்லிங்கம் ஸ்படிகத்தினாலானது; விபீடணனால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. நடராஜர் சந்நிதியில் இரண்டு நடராஜர் திருவுருவங்கள் உள்ளன. ஒரு நடராஜர் திருமுடியில் இருமருங்கிலும் சடைகளில்லை. கீழேயுள்ள முயலகன் நேரே நோக்கிப் படுத்துக்கொண்டிருப்பதுடன் அவன் கால்கள் பின்புறமாக இருக்கின்றன. கிழக்குப் பிரகாரத்தின் வடபுறம் சந்திரன், கிருத்திகை, உரோகிணி இவர்களுடைய விக்கிரகங்கள் காணப்படுகின்றன.

பின்னர், இராமநாதசுவாமி சந்நிதியைச் சேரலாம். இராமலிங்கமூர்த்தி கிழக்கு நோக்கி யிருக்கிறார். அவர் சந்நிதிக்கு வடபுறம் கிழக்கு நோக்கி காசிவிசுவநாதர் சந்நிதி யிருக்கிறது. இங்குள்ள இலிங்கமே அனுமாரால் கொண்டு வரப்பட்டது. பூசை முதலியவை முதலில் இந்த மூர்த்

திக்கே நடைபெறுகிறது. இராமலிங்கேசர் சந்நிதி முன் மண்டபத்தின் தென்புறத்தில், இராமர், சீதை, இலக்குவர் இவர்களின் திருவுருவங்கள் இருக்கின்றன. முன்னுல், சுக்கிரீவன் கையை வாயருகில் கொண்டுபோய், தலை வணங்கி விண்ணப்பம் செய்கிருன். அவனுடைய பாதங்கள் வானரப்பாதங்களாகவே யுள்ளன. அனுமார் இரண்டு கைகளிலும் இரண்டு இலிங்கங்கள் கொண்டு வந்து நிற்கிருர். இரு கைகளிலும் இலிங்கங்கள் இருப்ப தால் அவர் கைகூப்பி வணங்க முடியவில்லை. அதனுல் தன் தலைவனுன சுக்கிரீவன் மூலமாகவே தான்வந்த செய்தி யைத் தெரிவிப்பது போன்று இருக்கிறது. இந்த அழகிய உருவங்களை அமைத்த சிற்பியின் அற்புதத் திறமை அவைகளை உற்றுநோக்குவோர்க்கே புலனுகும். இந்த உருவங்களுக்கு எதிரில் தெற்குநோக்கி தனியே ஒரு ஆஞ்சநேயரும் எழுந்தருளியிருக்கிருர்.

சுவாமி கோயிலில் அவசியம் பார்க்கவேண்டியவை களில் ஒன்று உற்சவநந்திகேசுவரர். அனுமான் போன்ற தோற்றத்தையும் கொடுக்கிருர். இரு கைகள் கூப்பியும், இரு கைகளில் மான்மழுவுடனும் காட்சி தருகிருர். மான் மழுக்களை மறைத்துவிட்டுப் பார்த்தால் அனுமான் போன்றே தோன்றுகிருர். வால், குரங்கு வால்போல் தனியாகவும், அது தொடையுடன் சேர்க்கப்பட்ட இடத் தில் கூர்ச்சம்(குஞ்சம்) போன்றும் அழகாக இருக்கிறது. இத்தலவரலாற்றிற்கேற்ப ஒரே உருவத்தில் நந்தி யெம்பெருமானையும், அனுமானையும் அமைத்திருக்கும் சிற்பியின் கூர்த்தமதியும், கைத்திறனும் கண்டு மகிழற் பாலது.

இராமநாதரை வழிபட்டபின் முதல் தென் பிரகா ரத்திலுள்ள வாயிலின் வழியாக அம்பிகை சந்நிதிக்குப் போகலாம். சந்நிதி கிழக்கு நோக்கியது. தேவியின் திருநாமங்கள், 'மலைவளர்காதலி', 'பர்வதவர்த்தினி' என்பன. அழகும் அருளும் நிரம்பிய திருவுருவம். சந்நிதியுள்

நுழைந்ததும் பிரகாரத்தின் தென்கிழக்கு மூலையில் கிழக்கு நோக்கிய கலியாணசுந்தரேசர் காட்சி யளிக்கிறார். அவர் பக்கத்தில் வடக்கு நோக்கி பிரமன், திருமால் இவர்களின் அழகான உருவங்கள் இருக்கின்றன. திருமால் திருக்கரத்தில் தாரைநீர் வார்த்துக்கொடுக்க கெண்டியை வைத்திருக்கிறார். மேற்குப் பிரகாரத்தின் தெற்குமூலையில் **சௌபாக்கிய கணபதி, சந்தான கணபதி** எழுந்தருளியுள்ளனர். அதே பிரகாரத்தில் ப்ராம்ஹி, மாஹேஸ்வா கௌமாரி, வைஷ்ணவி, வராஹி, மாஹேந்திரி, சாமுண்டரி முதலிய சத்தகன்னியர் உருவங்கள் இருக்கின்றன. வட மேற்கு மூலையில் பள்ளிகொண்டபெருமாள் சேவை சாதிக்கிறார். வடக்குப் பிரகாரத்தில் சண்டிகேசுவரி சந்நிதியும், வடகிழக்கு மூலையில் பள்ளியறையும் இருக்கின்றன. அப்பர், சம்பந்தர் இருவரும் இராமேசுவரத்தைப் பற்றிப் பாடியருளிய தேவாரப்பாடல்கள் சுவரில் வெள்ளைக்கற்களில் பொறிக்கப் பெற்றிருக்கின்றன.

அம்பாள் சந்நிதிக்கு முன்னுள்ள சுக்கிரவார மண்டபத்தில் கிழக்குப் பார்க்க அஷ்டலட்சுமி விக்கிரங்கள் இருக்கின்றன. ஆதிலட்சுமி, சந்தானலட்சுமி, கெஜலட்சுமி, தனலட்சுமி, தான்யலட்சுமி, ஜெயலட்சுமி, ஐசுவர்யலட்சுமி,வீரலட்சுமி இவர்களே அஷ்டலட்சுமிகள் ஆவர். அந்த மண்டபத்திலேயே வடபக்கம் உள்ள எட்டுத்தூண்களில் மனோன்மணி, மாஹேந்திரி, கௌமாரி, இராஜராஜேசுவரி இலட்சுமி, காளி,சாமுண்டி, துவாரபாலிகா இவர்களின் சிலைகள் இருக்கின்றன. தென்புறம் உள்ள எட்டுத் தூண்களில் துவாரபாலிகா, சிவதுர்க்கா, மனோன்மணி, வாகீசுவரி, சேதுபதி கடம்பத்தேவர், பிரதானி, புவனேசுவரி, அன்னபூர்ணா இவர்களின் உருவங்கள் அமைந்திருக்கின்றன. இந்த மண்டபத்தைத்தாண்டி கிழக்கே வந்தால் அம்பாள் சந்நிதி வாயிலுக்கு இருபுறமும் உள்ள தூண்களில் விஜயரகுநாத சேதுபதி, முத்திருளப்பபிள்ளை, வடுகநாததேவர், பெரியதிருவுடையாத்தேவர், சேதுபதி

காத்தாதேவர், சின்னணத்தேவர், இரகுநாதசேர்வை, இரண்டு துறவிகள் முதலியோருடைய உருவங்கள் கம்பீர மாகக் காட்சியளிக்கின்றன. தூண் ஒன்றில் உள்ள நரசிம்மாவதாரம் பார்க்கத்தக்கது. சுவாமி சந்நிதியின் மையப்பத்தியில் ஒரு தூணில் சின்னபிரதானி கிருஷ்ணய் யங்காரின் உருவம் இருக்கின்றது. இரண்டாம் பிரகாரத் தில் கோபுர வாயிலுக்கு உள்தென்புறம் மேற்குநோக்கி வல்லபைகணபதியின் திருவுருவம் உள்ளது. அது மிகவும் அழகிய சிற்பவேலைப்பாடுடையது.

இராமநாதர் சந்நிதிக்குப் பின்புறம் **சேதுமாதவர்** என்ற பெருமாள் சந்நிதி இருக்கிறது. அவருடைய திருவுருவம் வெண்மையாக இருக்கின்றபடியால், **சுவேத மாதவர்** என்ற பெயர் ஏற்பட்டது. சேது என்ற பெய ரைச் சம்பந்தப்படுத்தி மக்கள் 'சேதுமாதவர் என்று அழைக்கலாயினர். மூன்றும் பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் **இராமலிங்கப் பிரதிஷ்டை** செய்யும் காட்சி இருக் கிறது. இராமர் சீதை சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வதும், அனுமான் இலிங்கங்கள் கொண்டுவருவதும் அப்படியே உருவங்களாகச் செய்து அமைக்கப்பட்டிருக்கிறது. இது அவசியம் பார்க்கத்தக்கது.

இக்கோயிலின் பிரகாரங்கள் உலகப்புகழ் பெற் றவை. மூன்றும் பிரகாரத்தைச் சுற்றிவரும்போது அதன் பேரழகைக்கண்டு மகிழலாம். பிரகாரங்கள் 4000 அடி நீளமும், 17 முதல் 21 அடி அகலமும், தரை மட்டத்தி லிருந்து மேல் மண்டபம் 30 அடி உயரமும் உள்ளவை. "பிரகாரங்களே இந்த கோயிலின் பெருமைக்குக் கார ணம்" என்று பர்குசன் என்ற பேரறிஞர் தாம் எழுதிய "இந்திய கீழ்நாட்டுச் சிற்பம்" என்ற நூலில் கூறியிருக் கிருர். கோயிலின் அமைப்பை இந்நூலிலுள்ள தரைப் படத்தில் காணலாம்.

## 4. தீர்த்தங்கள்

**தலத்தின்** பெருமையையும், **மூர்த்தியின்** மகிமையையும் தெரிந்துகொண்ட பிறகு **தீர்த்தத்தின்** சிறப்பை அறிந்து கொள்வது மிகவும் அவசியமானது. இத்தலத்தையும், இதைச் சுற்றியும் இருப்பதாகச் சொல்லப்படும் தீர்த்தங்கள் 64 என்பர். சில நூல்களில் 56 என்றும் சொல்லப் படுகிறது. சில தீர்த்தங்களின் பெயர்கள் தெரிந்த போதிலும் அவை இப்போது சொரூபத்தில் இல்லை. **சேதுப்புராணமான** தலபுராணத்திலும், **தேவையுலா** என்ற நூலிலும் 24 தீர்த்தங்களைச் சிறந்தவையெனக் கூறப் பட்டிருக்கின்றது.

**சேதுதீர்த்தம்:** இது இராமேசுவரம் தீவின் தென் கிழக்குக் கோடியில் இருக்கிறது. பாம்பன் சந்திப்பி லிருந்து பிரிந்து செல்லும் இருப்புப்பாதை வழியே 16 கல் போய் தனுஷ்கோடி நிலையத்தை அடைந்து, அங்கிருந்து கடற்கரையோரமாக இரண்டு கல் தொலை நடந்து சென் ருல் சேது தீர்த்தத்தைச் சேரலாம். புனித சேது, புண் ணிய சேது, இராமசேது என்று இதை மக்கள் வழங் குவர். இராமேசுவரத்திற்குப் போவதற்குமுன் சேதுவில் நீராடிய பின்பே போகவேண்டுமென்று கூறப்படுகிறது. வடமொழியில் **சேது** என்ருல் **பாலம்** என்று பொருள். இராமபிரான் இலங்கைக்குச் செல்வதற்கு, இவ்விடத்தில் தான் அணைகட்டிச் சென்றதால் இராமசேது என்ற பெயர் உண்டாயிற்று. இது வங்காளவிரிகுடாவும், இந்து மகாசமுத்திரமும் ("மகோததி", "இரத்தினுகரம்" என்ற பெயர்களுடன்) சேருமிடத்தில் சேதுபுண்ணியதீர்த்த கட்டமிருக்கிறது. இராமேசுவரம் தீவு வில்போன்று நீண்டிருக்கிறது. அதன் தென்கிழக்கு முனையில் இருப்ப தால் **தனுஷ்கோடி** என்ற பெயர் உண்டாயிற்று. இந்த இடத்தில் இராமபிரான் தன் வில்லின் நுனியால் அணையை உடைத்தார், அதனுல் அந்தப் பெயர் ஏற்பட்டதென்றும் கூறுகின்றனர். சேதுவின் இரத்தினுகரத்தில் முதலில்

நீராடுவர். இதை மலநீக்கமுழுக்கு (மலவிமோசன ஸ்நானம்) என்பர். இந்த புண்ணிய தீர்த்தத்தில் 36 நாட்கள் 36 முழுக்குகள் செய்யவேண்டுமென்பர். பிதுர்க்கடன் களையும் இங்கே மக்கள் செய்கின்றனர். ஆடி, தை மாத அமாவாசைகளில் இங்கு பல்லாயிரக்கணக்கான மக்கள் நீராடுவர். அர்த்தோதயம், மகோதயம் முதலிய புண்ணிய காலங்களில் இராமநாதசுவாமி பஞ்சமூர்த்திகளோடு சென்று தீர்த்தம் கொடுப்பர். அப்போது இலட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் நீராடி, இறைவனை வணங்குவர். "நீடு தனுக்கோடியினை நினைந்தாலும், புகழ்ந்தாலும், நேர் கண்டாலும் வீடுபெறல் எளிதாகும்" என்று இதன் பெருமையைச் சேதுப்புராணம் கூறுகிறது. இராமர் சீதைக்குச் சேதுவைக்காட்டி அதன் மகிமையைப் பின் வருமாறு கூறுகிறார்:—

நெற்றியி னழலுஞ் செங்கணீ றணிகடவுணீடு
கற்றையின் சடையின் மேவுங் கங்கையுஞ் சேதுவாகப்
பெற்றிலமென்று கொண்டு பெருந்தவம் புரிகின்றாளால்
மற்றிதன் தூய்மை எவ்வாறுரைப்பது மலர்க்கண்வந்தாய்.

சிவபெருமான் சடைமுடியிலுள்ள கங்கையும் தான் சேதுவாக இருக்கும் பேறுபெறவில்லையேயென்று பெருந் தவம் செய்கின்றாள் என்பது இதன் பொருள். அசுவத் தாமன் தூங்கியவர்களைக் கொன்ற பாவமும், தரும குப்தன் பைத்தியமும், பராவசு என்பான் பிராமணனைக் கொன்ற குற்றமும், சுமதி யென்பவனுடைய மகாபாதக மும் இந்த தீர்த்தத்தில் நீராடியபின் தீர்ந்து பேறுபெற் றனர் என்று புராணம் கூறுகிறது.

**அக்கினி தீர்த்தம்:** இது இராமநாதர் கோயில் சந்நிதித் தெருவிற்குக் கிழக்கிலுள்ள கடல். இங்கேயும் நீராடி பிதுர்க்கடன்களைச்செய்து கொள்வது வழக்கம். துஷ்புண்ணியன் என்பான் பேயினால் அடைந்த துன் பத்தை இந்த தீர்த்தத்தில் நீராடி நீக்கிக்கொண்டான் என்று கூறப்படுகிறது.

**மகாலட்சுமி தீர்த்தம் :** கிழக்கோபுரத்தருசில் அனுமான் கோயிலுக்குத் தெற்கேயுள்ள திருக்குளம். தருமராஜன் இதில் நீராடிச் செல்வங்களைப் பெற்றதாகச் சொல்லப்படுகிறது.

**காயத்திரி, சாவித்திரி, சரசுவதி தீர்த்தங்கள் :** இவை மூன்றும் கிழ்க்கோபுரத்துக்கு வடக்கேயுள்ள கிணறுகள். இங்கு நீராடிக் காசிபர் சாபம் நீங்கினுர் என்பது புராணக் கூற்று.

**சேது மாதவ தீர்த்தம் :** மேற்கு மூன்ரும் பிரகாரத்தில் சேதுமாதவர் கோயிலுக்குத் தென்புறமுள்ள அழகிய திருக்குளம். இதில் படிந்தவர்களுக்குத் திருமகள் அருளும், சித்தசுத்தியும் பெறுவர் என்பர்.

**கந்தமாதன, கவாட்ச, கவய, நள, நீல தீர்த்தங்கள் :** இந்த ஐந்தும் சேதுமாதவர் கோயிலைச் சுற்றியிருக்கின்றன. இதில் நீராடியவர்கள் யாகபலன்களையும், வறுமைநீங்கிச் செல்வத்தையும், வீடுபேற்றையும் பெறுவார்கள் என்று புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

**சங்கு தீர்த்தம் :** வடக்கு இரண்டாம் பிரகாரத்தில் கருவூலத்திற்கருகில் இருக்கிறது. இதில் நீராடி வத்சநாப முனிவர் செய்நன்றி மறந்த பாவத்தை நீக்கிக்கொண்டார் என்று சொல்லப்படுகிறது.

**சக்கர தீர்த்தம் அல்லது மூனி தீர்த்தம் :** கிழக்கு இரண்டாம் பிரகாரத்திலிருக்கிறது. இங்கு சூரியன் மூழ்கிப் பொற்கை பெற்றதாகக் கூறப்படுகிறது.

**பிரமஹத்தி விமோசன, சூரிய, சந்திர தீர்த்தங்கள்:** இவை வடக்கு உட்பிரகாரத்திலிருக்கின்றன. இதில் நீராடினுல் பிரமஹத்திப்பாவ நீக்கமும், முக்கால ஞானப்பேறும் கிடைக்கும் என்பர்.

**கங்கை, யமுனை, கயை தீர்த்தங்கள் :** இவைகளும் கோயிலில் வடக்கு உட்பிரகாரத்தில் இருக்கின்றன.

இங்கு நீராடி ஞானசுருதிமன்னன் ஞானம் பெற்றதாகக் கூறப்படுகின்றது.

**சிவதீர்த்தம் அல்லது சிவகங்கை:** சுவாமி அம்மன் சந்நிதிகளுக்கு இடையே பெரிய நந்திக்குத் தெற்கேயுள்ள அழகிய சிறு திருக்குளம். இதில் படிந்து பைரவர் பிரம ஹத்தி பாவத்தை நீக்கிக்கொண்டார் எனப்படுகிறது.

**சாத்தியாமிருததீர்த்தம்:** அம்பாள் சந்நிதியில் சுக்கிர வார சவுக்கைக்குத் தெற்கேயுள்ள கிணறு. இதில் நீரா டிப் புரூரவச் சக்கரவர்த்தி தும்புரு சாபத்தை நீக்கிக் கொண்டார் என்பது புராணச் செய்தி.

**சர்வதீர்த்தம்:** இராமநாதர் சந்நிதியில் முதல் பிரகா ரத்தில் தென்கிழக்கில் இருக்கும் கிணறு. சுதரிசனர் என்பவர் பிறவிக்குருடும், நரை திரை மூப்பு இவைகளை யும் இங்கு நீராடி நீங்கப்பெற்றார் என்று சொல்லப் படுகிறது.

**கோடி தீர்த்தம்:** வடக்கு முதல் பிரகாரத்தில் விசாலாட்சியம்மை சந்நிதிக்கருகில் உள்ள கிணறு. இதில் யாரும் நேரே தண்ணீர் எடுத்து முழுக முடியாது. அதற் காக வேலையிலுள்ள பிராமணர் முகந்து ஊற்றியே பெற் றுக்கொள்ளவேண்டும். இது எல்லா தீர்த்தங்களிலும் மேலானதாகக் கருதப்படுகிறது. இதில் மூழ்கியபின் எவரும் இராமேசுவரத்தில் தங்கக்கூடாது என்பது ஐதீ கம். அதனாலேயே கோடி (கடைசி) தீர்த்தம் என்று பெயர் பெற்றதுபோலும். இதன் தண்ணீரையே மக்கள் கலசங்களில் கொண்டு செல்வது வழக்கம். எக்காலத்தும் அது கெடுகிறதில்லை என்பர். கிருஷ்ணபகவான் இந்த தீர்த்தத்தில் நீராடிக் கம்சனைக்கொன்ற பாவத்தை நிவர்த்தி செய்துகொண்டார் என்று புராணம் கூறுகிறது. இதன் நீரில் மூழ்கியவர் இஷ்டசித்தியும், ஞானமுத்தியும் பெறுவர் என்றும் சொல்லப்படுகிறது.

மேலே சொல்லப்பட்ட மகாலட்சுமி தீர்த்தம் முதல் கோடி தீர்த்தம் வரையுள்ள 22 தீர்த்தங்களும் கோயிலுக் குள்ளேயே இருக்கின்றன. அவைகள் இருக்குமிடங்களை இந்நூலிலுள்ள தரைப்படத்தின் உதவியால் எளிதில் அறிந்துகொள்ளலாம். இந்த தீர்த்தங்களையன்றி இராமேசுவரத்திலும், அதைச் சுற்றிலும் பல தீர்த்தங்கள் இருக்கின்றன. அவைகளைப்பற்றியும் சுருக்கமாகக் கீழே கூறப்படுகிறது.

**உப்பூர் விநாயகர் சமுத்திரம்:** இது தேவிப்பட்டினத் திற்கும் வடக்கே பத்து கல் தொலைவிலுள்ள உப்பூர் என்னும் ஊருக்கருகில் உள்ள கடல். இங்கெழுந்தருளி யுள்ள **வெயிலுகந்த விநாயகர்** மிகவும் புகழ்பெற்றமூர்த்தி.

**திருப்பாற்கடல் (க்ஷீரகுண்டம்):** இது உப்பூரிலிருந்து தேவிப்பட்டினத்துக்குப் போகும் வழியில் திருப்பாலக் குடிக்கருகில் இருக்கிறது.

**தேவிப்பட்டினம் (நவபாஷாணம்):** இங்கு கடல் தண் ணீரில் நவக்கிரகங்கள் உள்ளன. அவை இராமபிரானால் பிரதிஷ்டை செய்யப்பட்டதென்பர். அவற்றை வலம் வந்து நீராடுவோர் நவக்கிரகதோஷ நிவாரணம் பெறுவர். இங்கு நீராடிய பின்பே மக்கள் தனுஷ்கோடி செல்ல வேண்டும் என்பர்.

**சக்கரதீர்த்தம் (தரும புஷ்கரணி):** தேவி பட்டினத்தி லுள்ள திருக்குளம். சக்கரத்தாழ்வார் சாபவிமோசன மடைந்ததாகவும், காலவமுனிவர் இங்கு தவம் செய்த தாகவும் கூறப்படுகிறது.

**வேதாளவரத தீர்த்தம்:** மண்டபம் இருப்புப்பாதை நிலையத்திலிறங்கி வெற்றிலைமண்டபம் என்ற ஊர் சென்று, அங்கிருந்து இரண்டு கல் தொலைவிலுள்ள வேதாளை என்னுமிடத்திலிருக்கிறது. இங்கு நீராடி சுதரி சனன் என்னும் கந்தருவன் வேதாள உருவத்தினின்றும் நீங்கினன்.

**பாபவிநாச தீர்த்தம் :** மண்டபம் இருப்புப்பாதை நிலையத்திலிறங்கி வெற்றிலைமண்டபம் சென்றால் அங்குள்ள சத்திரத்திற்கருகேயிருக்கிறது. இதில் நீராடியவர் எல்லா பாவங்களும் நீங்கப்பெறுவர்.

**பைரவ, கபி தீர்த்தங்கள் :** இவற்றிற்குப் பாம்பன் இருப்புப்பாதை நிலையத்திலிறங்கிச் செல்லவேண்டும். கபி தீர்த்தத்தில் நீராடி அரம்பை சாபவிமோசனம் பெற்றதாகக் கூறப்படுகிறது.

**சீதா குண்டம் :** தங்கச்சிமடம் இருப்புப்பாதை நிலையத்துக்கு வடக்கிலும் கபிதீர்த்தத்திற்குக் கிழக்கிலும் இருக்கின்றது. இங்கு இந்திரன் பிரமஹத்தியை நீக்கிக் கொண்டான்.

**மங்கள தீர்த்தம் :** தங்கச்சிமடம் சாலைக்குத் தென்புறமாக இருக்கிறது.

**அமிருதவாபி :** இது தங்கச்சிமடம் அருகிலுள்ள ஏகாந்தராமசுவாமி கோயிலுக்குள் இருக்கும் கிணறு.

**இரணவிமோசன தீர்த்தம் :** இது ஏகாந்தராமசுவாமி கோயிலுக்கருகில் சாலைக்கு வடக்கிலிருக்கிறது. இதில் படிந்தால் எல்லா இரணங்களும் நிவாரணமாகும்.

**வில்லூருணி :** இரணவிமோசனத் தீர்த்தத்துக்கு வடக்கே கடற்கரையருகேயுள்ளது. சீதையின் நீர்வேட்கையைத் தீர்ப்பதற்காக இராமபிரான் வில்லூன்றி யேற்படுத்தியது. கடற்கரையருகிலிருந்தாலும் மிகவும் நல்ல தண்ணீர்.

**இலட்சுமண தீர்த்தம் :** இராமேசுவரம் கோயிலுக்கு மேற்கே செல்லும் சாலையில் அரை கல் தொலைவிலுள்ள திருக்குளம். இலட்சுமணர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து திருமஞ்சனம் செய்விப்பதற்காக ஏற்படுத்தியதாகக் கூறப்படுகிறது. பலராமருக்கு பிரமஹத்தி நீங்கினதாகவும் சொல்லப்படுகிறது.

**இராம தீர்த்தம்:** இலட்சுமண தீர்த்தத்திற்குக் கிழக்கி லுள்ள திருக்குளம். இதன் மேல்கரையில் பழமையான இராமர் கோயில் இருக்கிறது. மூர்த்திகள் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கின்றன.

**சுக்கிரீவ, அங்கத. சாம்பவ, தரும, பீம, அருச்சுன, நகுல, சகாதேவ, திரௌபதி தீர்த்தங்கள்:** கந்த மாதனபர்வதத் திற்குப் போகும் வழியிலும் அதற்கருகிலும் உள்ளன.

**பிரம தீர்த்தம்:** பத்திரகாளி கோயிலுக்குக் கீழ்ப்புறம் இருக்கிறது.

**அனும குண்டம்:** கோயில் வெளிவீதிக்கு வடக்கே யுள்ளது.

**அகத்திய தீர்த்தம்:** கோயிலுக்கு வெளியே ஈசான திக்கில் அக்கினி தீர்த்தத்திற்கு வடக்கே யிருக்கிறது.

**நாக தீர்த்தம்:** இராமேசுவரம் கீழவீதியில் தேவஸ் தான கட்டிடத்தின் பின்புறமுள்ள தோட்டத்திலிருக் கிறது. கங்கை முதலிய எல்லா தீர்த்தங்களும் தங்கள் பாவங்களைப் போக்கிக்கொள்ள இங்கே வசிப்பதாகச் சொல்லப்படுகிறது.

**ஜடாமகுட தீர்த்தம் (ஜடாயுதீர்த்தம்):** இராமேசுவரத் திற்குக் கிழக்கே தனுஷ்கோடிக்குச் செல்லும் பாதையில் கோதண்டராமசுவாமி கோயிலுக்கு அண்மையில் மணல் மேட்டிலிருக்கும் திருக்குளம். இராமலட்சுமணர்கள் இங்கு சடைமுடியைக் கழுவியதாகக் கூறுவர்.

இன்னும் **தேவ, விபீடண, கஜ, சரப, குமுத, ஹர, பனச** தீர்த்தங்களும் இருந்தனவாகப்புராணங்கள் கூறுகின்றன. அவை இப்பொழுது சொரூபத்தில் இல்லை.

## 5. இராமேசுவரத்திலுள்ள மற்ற கோயில்கள்

**ஏகாந்தராமர் கோயில்:** தங்கச்சிமடம் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து கிழக்கே ஒரு கல் தொலைவிலிருக்கிறது.

இராமர், சீதை, இலட்சுமணர் நின்ற திருக்கோலத்தில் அழகிய காட்சியளிக்கின்றனர். இராமர் தமது திருக்கரத்தைச் சிறிது தூக்கிக்கொண்டு சீதையுடன் பேசுவது போன்ற பாவனையிலிருக்கிருர். கடல் அலைகளின் ஓசையில்லாமல் தனியாக (ஏகாந்தமாக) இங்கு இராமர் யுத்த மந்திராலோசனை செய்ததாகக் கூறப்படுகிறது. இந்த கோயிலைப்பற்றி ஆனந்த ராமாயணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

**காட்டுப்பிள்ளையார் கோயில்:** ஏகாந்தராமசுவாமி கோயிலுக்குக் கிழக்கில் சாலைக்கு வடபுறமிருக்கிறது.

**கந்தமாதன பர்வதம்:** இராமநாதர் கோயிலுக்கு வடக்கே இரண்டு கல் தொலைவிலுள்ள மணற்குன்றின் மேல் இரண்டடுக்குக் கட்டிடம் ஒன்று இருக்கிறது. அதில் இராமருடைய பாதங்கள் உள்ளன. இங்கிருந்துதான் அனுமான் கடலைக்கடக்க அளவிட்டார் என்று கூறப்படுகிறது. இவ்விடத்தில் சேதுபதிகளின் கோட்டையும் அரண்மனையும் இருந்து அழிந்துபோனதற்குள்ள அறிகுறிகள் காணப்படுகின்றன.

**நம்பிநாயகியம்மன் கோயில்:** இக்கோயில் இராமேசுவரத்திற்குத் தெற்கே இரண்டு கல் தூரத்திலிருக்கிறது. நம்பியவர்க்கு அருள்புரியும் நாயகியாக இருப்பதால் அம்பிகை அந்த திருநாமத்தைப் பெற்ருள். தேவியை வேண்டிக்கொண்டு நோய் முதலிய துன்பங்கள் நீங்கப்பெறுகின்றனர்.

**கோதண்டராமர் கோயில்:** இராமேசுவரத்தில் தென் கடற்கரையருகில் இருப்புப்பாதை நிலையத்திற்குத் தென்புறம் இருக்கிறது. இராமேசுவரத்திலிருந்து ஐந்து கல் தொலைவு இருக்கும். கோயில் மணல்மேட்டிலிருக்கிறது. கடற்கரையோரமாக நடந்து செல்லலாம். கோயிலில் இராமர், சீதை, இலட்சுமணர் அர்ச்சாவ்தாரமாய் எழுந்



கந்தமாதன பர்வதம்

தருளிச் சேவை சாதிக்கின்றனர். விபீடணரும் இருக்கின்றார். இவ்விடத்திலேதான் அவர் இராமரிடம் சரண் அடைந்ததாகச் சொல்லப்படுகிறது.

**உஜ்ஜெயினி மகாகாளி கோயில்:** இராமநாதர் சந்நிதிக்கு எதிரில் அக்கினி தீர்த்தக்கரையில் மேற்குநோக்கி இந்த காளி கோயில் இருக்கிறது.

## 6. வழங்கும் கதைகள்

**இராமலிங்கப் பிரதிஷ்டை:** இராமபிரான் இலங்கை செல்வதற்கு வானரசேனையின் உதவியால் அணைகட்டிக் கடலைக்கடந்து இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்றுவிட்டு சீதையை மீட்டுக்கொண்டு திரும்பினார். கந்தமாதனத்தில் வந்து தங்கினார். அரக்கர்களை அழித்த பாவத்தைப் போக்குவதற்காக முனிவர் முதலியோர் சிவ பெருமானை வழிபட வேண்டுமென்று அறிவுரை பகர்ந்தனர். அவ்வண்ணமே இராமர் அனுமானைக் கயிலாயம் சென்று இலிங்கம் கொண்டுவரப் பணித்தார். சென்ற மாருதி மீண்டுவரக் காலந்தாழ்த்தது. நல்ல வேளையில் சிவ லிங்கப் பிரதிஷ்டை செய்யவேண்டியிருந்தபடியால் சீதா பிராட்டியார் மணலால் ஒரு இலிங்கத்தைப் பிடித்து வைக்க, அதைப் பிரதிஷ்டை செய்து இராமர் பூசித்தார். பின்வந்தடைந்த அனுமான் கோபங்கொண்டு அந்த இலிங்கத்தை வாலினால் இழுத்துவிட முயற்சித்தார். பலன் இல்லை. இராமபிரான் அனுமான் கொண்டுவந்த இலிங்கத்தைத் தான்பிரதிஷ்டைசெய்த இலிங்கத்திற்கு வடக்கே அமைத்து, பூசை வழிபாடுகளில் முதன்மையளித்து மாருதியின் கோபத்தைத் தணித்தார். அந்த மூர்த்தியே விசுவலிங்கம், விசுவநாதர் என்று வழங்கப்படுகிறது. அனுமான் இராமலிங்கத்தின்மேல் வாலைச்சுற்றிய குறிகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. அனுமான் வால் அறுபட்டு இரத்தம் சிந்தியதாகவும், கீழக்கோபுரவாயிலிலுள்ள

அவரது திருவுருவம் அதனுல் சிவப்பாக இருப்பதாகவும் சொல்லுவர்.

சேதுமாதவர் சிறப்பு : சுந்தரபாண்டியன் என்பவன் கடவுள் பக்தியில் சிறந்தவன். மகாலட்சுமி அவனுக்குத் திருமகளாய் அவதரித்து வளர்ந்து வந்தாள். குணநிதி என்று திருநாமம். திருமால் ஒரு மறையவர் வேடத்தில் தோன்றி பூங்காவனத்திலிருந்த அப்பெண்ணைக் கைப்பற்றி இழுத்தார். அவள் கூக்குரலிடவே அதையறிந்த மன்னன் அவரை இராமநாதர் கோயிலில் ஒரு மண்டபத்தில் சிறையில் வைத்தான். எம்பெருமான் அரசன் கனவில் தோன்றி நிகழ்ந்ததை உரைத்தார். தான் செய்த குற்றத்தை யுணர்ந்த மன்னன், அதைப் பொறுத்தருளி, தன் பெண்ணை மணந்து அங்கேயே எழுந்தருளியிருக்கும்படி வேண்டிக்கொண்டான். அதற்கு இசைந்து அங்கேயே சேதுமாதவராகத் தங்கியிருந்து தம்மை நாடிவரும் பக்த கோடிகளுக்கு சேவை சாதித்தருளுகிருர்.

தாயுமானுர் நிகழ்த்திய அற்புதம் : தாயுமான அடிகளார் ஒருசமயம் இராமேசுவரம் வந்தபோது மழையில்லாமல் மக்கள் துன்பப்பட்டுக்கொண்டிருந்தனர். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கிப் பின்வரும் பாடலைப் பாடினுர்:-

சைவசமயம் சமயமெனில் அச்சமயத்
தெய்வம் பிறைசூடும் தெய்வமெனில்—ஐவரைவென்று
ஆனந்த வெள்ளத் தழுந்துவதே முத்தியெனில்
வானங்காள் பெய்க மழை.

அவ்வளவில் மேகங்கள் திரண்டு பெரிய மழை பெய்தது. அம்பிகையின்பேரில் "மலைவளர்காதலிப் பதிகம்" பாடியதுடன் கீழ்க்காணும் பாசுரத்தையும் அவர் ஓதியுள்ளார் :-

காதில் ஓலையை வரைந்துமேற் குமிழையும் கறுவி வேள் கருநீலப்
போதுபோன்றிடும் கன்னியர் மயக்கிலெப் போதுமே தளராமல்
மாதுகாதலி பங்கனை யபங்கனை மாட மாளிகை சூழும்
சேதுமேவிய ராம நாயகன்தனைச் சிந்தைசெய் மடநெஞ்சே.

**பிறசெய்திகள் :** இராமேசுவரத்தில் மாடுகள் கட்டி ஏர் உழுவதில்லை யென்றும், உலக்கை கொண்டு உரலில் எதையும் இடிப்பதில்லை யென்றும் கூறப்படுகிறது.

## 7. சிற்பங்கள்

கி. மு. மூன்றும் நூற்றுண்டுதான் இராமாயண காலம் என்று ஆராய்ச்சியறிஞர் கருதுகின்றனர். இராம பிரான் சிவலிங்கத்தை அக்காலத்தே தான் பிரதிஷ்டை செய்தார் என்றும் அறிகிறோம். கி. பி. ஏழாவது நூற்றுண்டிலிருந்த அப்பர், சம்பந்தர் இருவரும் தங்களுடைய தேவாரப் பாசுரங்களில் **இராமர் செய்தகோயில்** என்று திட்டவட்டமாகச் சொல்லியிருக்கின்றனர். அவர்கள் வழிபட்டபோதிருந்த கோயிலைத்தான் அவர்கள் சொல்லி யிருக்கவேண்டும். இலங்கை மன்னன் பராக்கிரமபாகு என்பவன் பாண்டிநாட்டின் பேரில் படையெடுத்து வந்து தன் வெற்றிக்கறிகுறியாக இராமேசுவரத்தில் கி. பி. 1173-ல் நிச்சங்கேசுவரருக்கு ஒரு கோயில் எடுப்பித்தான் என்று இலங்கையிலுள்ள தம்பாலா கல்வெட்டு ஒன்று அறிவிக்கின்றது. இப்போதுள்ள கோயில் நிறுவுவதற்கு இதுவே ஆதிகாரணமாக இருக்கலாம். அதற்குமுன் சிவலிங்கமூர்த்தியான இராமநாதரை ஒரு குடிசையில் பெண்துறவி யொருவரால் பூசை செய்யப்பட்டதாகவும் கூறுவர். கோயிலைத் தொடங்கிக் கட்டியவர் யார் என்று அறியக்கூடவில்லை.

கி. பி. 1434-ல் சேதுமாதவர் கோயிலை உடையான் சேதுபதி யென்பவரின் அனுமதிபெற்று நாகூர் வணிகர் ஒருவர் கட்டினுர் என்று தெரிகிறது. இந்த இரண்டு வள்ளல்களாலேயே மேலக்கோபுரம், வெளிமதிற்சுவர்கள் முதலியன கட்டப்பட்டதென்பர்.

கி. பி. 1450-ல் கோயில் உட்புறத்தில் பல திருப்பணி களும், சந்நிதிக் கட்டிடங்களும் மதுரையில் வாழ்ந்த செல்வர் ஒருவரால் கட்டப்பெற்றது.

கி. பி. 1568-ல் சின்ன உடையான் கட்டத்தேவர் என்பாரும், மதுரையையாண்ட விசுவநாதநாயக்கரும் கோயிலில் பல கட்டிடங்களைக் கட்டினார்கள். விசுவநாத நாயக்கர், அவருடைய மகன் இருவருடைய சிலைகளும் கோயிலில் பெரிய நந்திக்கு முன்னே இருபுறமும் இருக்கின்றன. இரண்டாவது திருச்சுற்றின் தென்புறப்பாதி திருமலைசேதுபதி (கி. பி. 1647—1672) என்பவரால் கட்டப்பெற்றது. இவரது உருவச்சிலை அம்மன் சந்நிதியில் இருக்கிறது. சுமார் கி. பி. 1740-ல் இருந்த சேதுபதிகளில் ஒருவரால் பிரகாரம் கட்ட ஆரம்பிக்கப்பெற்றது. அது முத்துஇராமலிங்கசேதுபதி (கி. பி. 1725—1770) என்பவரால் கட்டி முடிவடைந்தது.

இராமேசுவரம் கோயில் 865 அடி நீளம், 657 அடி அகலமும் உள்ளது. திராவிட நாகரீகத்தைத் தழுவி யமைக்கப்பட்டது. மண்டபங்கள், சந்நிதிகள் முதலியவை பாண்டியநாட்டு முறையில் காணப்பெறுகின்றன. 40 அடிகள் நீளமுள்ள பெருங்கற்களினால் செய்யப்பெற்ற உத்திரங்கள் முதலியவற்றைப் பயன்படுத்தியிருக்கின்றனர். கர்ப்பக்கிரகம் செதுக்கி மெருகிடப்பட்ட ஒருவகைக் கருப்புக் கல்லால் அமைக்கப்பெற்றிருக்கிறது. இலங்கையிலுள்ள கண்டிவாசியான வரராஜசேகரர் என்பவரால் தயாரித்து அனுப்பப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

இங்குள்ள நந்தி சுதையினாலான பெரிய உருவம். 23 அடி நீளம், 12 அடி அகலம், 17½ அடி உயரம் உடையது. மூன்றாம் பிரகாரத்திலிருக்கும் இராமலிங்கப் பிரதிஷ்டை பிம்பங்கள் தத்ரூபமாகக் காட்சியளிக்கின்றன. திரைக்குள் சென்றதும் உருவங்கள் உயிருள்ளவை போன்றே நமக்குத் தோன்றும். அனுப்பு மண்டபம், சுக்கிரவார மண்டபம், திருக்கல்யாணமண்டபம் இவைகள் விசாலமாகவும் காற்றோட்ட முடையதாகவும் அமைத்திருப்பது தனிச்சிறப்பு வாய்ந்தது. சத்தகன்னியர், வல்லபைகணபதி, கலியாணசுந்தரேசர், அஷ்டலட்சுமி,

சேதுபதிகள், பிரதானிகள் முதலிய திருவுருவங்கள் அற்புதச் சிற்பவேலைப்பாடுடையவை. உலோகத்தினால் செய்யப் பெற்ற குதிரைச்சொக்கர் உருவம் மிகவும் கம்பீரமான தோற்றமளிக்கிறது.

எல்லாவற்றிற்கும் மேலாகக் கருதப்படுவது இக் கோயிலிலுள்ள நீண்ட அகன்ற பிரகாரங்களே. இவை சுமார் 4000 அடி நீளமுடையன. இதைப்போன்ற மூடப் பெற்ற பெரிய பிரகாரங்கள் உலகத்தில் எங்குமே யில்லை யென்று கூறப்படுகிறது. இப்பிரகாரங்களை மேல்நாட்டினரும் கண்டு வியந்து வருகின்றனர். பிரகாரத்தூண்கள் நிற்கும் வரிசைமுறையே கண்கவர் வனப்பினதாகும்.

## 8. சேதுஇராமேசுவர யாத்திரைமுறை

இராமநாதபுரத்திற்கு வடகிழக்கே 20 கல் தொலைவிலிருக்கும் உப்பூர் என்ற இடத்திலுள்ள வெயிலுகந்த விநாயகரை வழிபட்டு யாத்திரை தொடங்கவேண்டும். அங்கிருந்து தெற்கே தேவிபட்டினத்திற்கு வந்து நவபாஷாணத்தைத் தெரிசித்து, மண்டபம், பாம்பன் முதலிய இடங்களிலுள்ள தீர்த்தங்களில் மூழ்கி தனுஷ்கோடிக்குச் செல்லவேண்டும். அந்த புண்ணியசேதுவில் நீராடியபின் இராமேசுவரம் வந்து, பல தீர்த்தங்களிலும் படிந்து இராமநாதரை வழிபடவேண்டும். கோடி தீர்த்தத்தில் மூழ்கியபின் அங்கே தங்காமல் இராமேசுவரம் விட்டுப் புறப்பட்டு விடவேண்டும். இராமபிரான் அயோத்திக்குச் சென்று முடிசூட்டிக் கொண்டபின் மறுபடியும் சேது யாத்திரையாக வந்தார் என்று ஆனந்தராமாயணத்தில் கூறப்பெற்றிருக்கிறது. இராமேசுவரம் விட்டகன்றபின் இராமநாதபுரத்திற்கு எட்டுக்கல் தெற்கிலுள்ள ஆதிசேது கடற்கரையில் மூழ்கி, மூன்று கல் வடக்கிலுள்ள தர்ப்ப சயனம் அல்லது திருப்புல்லணையில் பெருமாளைச் சேவிக்க வேண்டும். பின்னர் இரமாநாதபுரம் வந்து ஆதிசேதுபதியான குகனுக்கு இராமர் பட்டம் கட்டியதைக் குறிக்கும்

கல் ஒன்று அரண்மனை இராமலிங்க விலாசத்திலுள்ளதைக் கடைசி அங்கமாகப் பார்க்கவேண்டும். இராமநாதபுரத்திற்குத் தென்மேற்கேயுள்ள **உத்தரகோசமங்கை** என்ற சிறந்த சிவத்தலத்திற்கும் சென்று வழிபடலாம்.

## 9. தலத்தைப் பற்றிய நூல்கள்

இராமேசுவரம், சேது இவ்விரண்டைப்பற்றியும் வடமொழி, தமிழ்மொழி நூல்கள் பலவற்றில் சொல்லப்பட்டிருக்கிறது. வடமொழியில் ருக்வேதம், தைத்ரீயசம்ஹிதை, வால்மீகி இராமாயணம், அத்யாத்ம இராமாயணம், ஆனந்த இராமாயணம், ஆக்னேய புராணம், பாகவத புராணம், பத்மபுராணம், பிரம்மாண்டபுராணம், மத்ச்ய புராணம், மனுஸ்மிருதி, காலவஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, பராசரஸ்மிருதி முதலியவைகளில் கூறப்பட்டிருக்கிறது. அவைகளிலுள்ள குறிப்புக்களின் சுருக்கத்தைப் பிற் சேர்க்கை X-ல் காணலாம்.

**திருஞானசம்பந்தர்** இப்பதிக்கு இரண்டு தேவாரப் பதிகங்கள் ஓதியருளியுள்ளார். (பிற்சேர்க்கை II பார்க்க). **முதற்பதிகத்தில்** இராமர், இராவணனைக் கொன்றபாவம் நீங்க இராமேசுவரம் கோயிலை நிறுவினரென்றும், இலங்கைக்குக் கடலில் அணைகட்டிச் சென்றரென்றும் கூறுகிறார். "தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன், பூவியலும் முடி பொன்றுவித்த பழி போயற, வேவியலுஞ் சிலையண்ணல் செய்த விராமேச்சுரம்" என்றும், "மானனநோக்கி வைதேகி தன்னையொருமாயையாற், கானதில்வவ்விய காரரக்கன்னுயிர் செற்றவ, னீனமில்லாப்புகழ் அண்ணல் செய்த விராமேச்சுரம்", என்றும், "அணையலைசூழ் கடலன்றடைத்துவழி செய்தவன்" என்றும் சொல்லியிருப்பது காண்க. இன்னும் "இராமேச்சுரம் மேவிய சிந்தையினர்கள் தம்மேல் வினை வீடுமே", "இராமேச்சுரம் பேறுடையான் பெயரேத்து மாந்தர் பிணிபேருமே", "இராமேச்சுரம் துணையிலிதூ

மலர்ப்பாதமேத்தத்துயர் நீங்குமே'' என்று இராமநாதனை வழிபடுவோர் எய்தும் பயனைக் கூறியிருக்கிறார். இரண்டாம் பதிகத்தில் இராமேசுவரத்தின் இயற்கையெழிலையும், சிவபெருமான் திருமேனியழகையும், அவன் ஆட்டத்தின் மாட்சியையும் போற்றிப் புகழ்கிறார். ஒரு பாட்டில் **மலைவளர்காதலி** என்று அம்பிகையின் பெயரைக் குறிக்கிறார்.

**திருநாவுக்கரசர் :** இத்தலத்திற்கு ஒரு பதிகம் பாடியருளியிருக்கிறார். (பிற்சேர்க்கை III). திருஞானசம்பந்தர் கூறியது போன்றே இவரும் கோயிலை இராமர் நிறுவினார் என்றும் சொல்கிறார். "போராழியம்மால் வேட்கையால் செய்த கோயில்'', "அன்பு கொண்டு தேடிமால் செய்த கோயில் திருவிராமேச்சுரம்'', "கடலிடைமலைகள் தம்மால் அடைத்து மால்கரும முற்றித்திடலிடைச்செய்த கோயில் திருவிராமேச்சுரம்'' என்றும் கூறியிருக்கிறார். இராமேச்சுரத்தை "நோக்கினால் வணங்குவார்க்கு நோய் வினை நுணுகுமன்றே'', "நாடிவாழ்நெஞ்சமே நீ நன்னெறியாகுமன்றே'' என்றும் சொல்லியிருக்கின்றார்.

**சேக்கிழார் :** பெரியபுராணத்தில் சம்பந்தர் வரலாற்றில் "திண்ணிய பொற்சிலைத் தடக்கை இராமன் செய்த திருவிராமேச்சுரம்'' என்றும், "சேதுவின்கட் செங்கண் மால் பூசை செய்த சிவபெருமான்'' என்றும் கூறியிருக்கிறார்.

**கம்பர் :** இராமாயணம் யுத்தகாண்டத்தில் மீட்சிப் படலத்தில் 7 பாடல்களிலும், பூசைப் படலத்தில் 21 பாடல்களிலும் இராமர் சீதைக்கு சேதுவின் பெருமை கூறியதையும் சிவலிங்கம் நிறுவி வழிபட்டதையும் கூறியிருக்கிறார். பிற்சேர்க்கை IV காண்க.

**அருணகிரிநாதர் :** திருப்புகழில் இரண்டு முழுப் பாடல்கள் இத்தலத்தைப்பற்றிப் பாடியிருப்பதுடன் வேறு இரண்டு பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார். "ஒகைதழல்வாளி விடுமுரி தனு நேமிவளைபாணி திருமார்ப

னரி மருகா வெனவே யோதமறை ராமெசுர மேவு குமரா வமரர் பெருமாளே" என்கிருர். (பிற்சேர்க்கை VI காண்க.)

**பரஞ்சோதி முனிவர் :** திருவிளையாடற் புராணத்தில் "மறவாளிலங்கை யிறைமகனை உதைத்த பழியால் மருண்டு அரி அன்று அறவாள் நேமி அளித்தவனை அருச்சித்தகன்ற அணிநகர்" என்று கூறியிருக்கிருர்.

**தாயுமானவர் :** வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை கண்டுணர்ந்த வித்தகர். இராமேச்சுரத்திற்கு வந்தபோது மழைவரும்படி ஒரு பாடல் பாடியதையும் இராமநாதர் பேரில் பாடிய ஒரு பாட்டையும் முன்னே கண்டோம். இராமேசுவரத்தில் எழுந்தருளியுள்ள பர்வதவர்த்தினி யம்மையின் பேரில் எட்டுப் பாடல்களையுடைய **மலைவளர் காதலிப்பதிகத்தைப்** பாடியருளியிருக்கிருர். (பிற்சேர்க்கை V பார்க்க). தேவியை "அகிலாண்ட கோடி யீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே" என்கிருர். "நதியுண்ட கடலெனச் சமயத் தையுண்ட பரஞான ஆனந்த வொளியே" என்றும் "வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய மகிமை பெறு பெரியபொருளே" என்றும் உயர்ந்த சமயச் சமரசக் கருத்துக்களை வெளியிடுகிருர். "உன் நாமம் உச்சரித்திடு மடியர் நாமமே நான் உச்சரிக்க வசமோ" என்றும், "சாண்கும்பியின் பொருட்டாய துன்தொண்டர் பணி செய்வதென்ருே" என்றும் சொல்லி ஏங்குகிருர். "கறை யுண்ட கண்டர் பால் அம்மை நின்தாளில் கருத்தொன்றும் உண்டாகுமேல்" சகல செல்வயோகங்களையும் பெறலாம் என்று சொல்கிருர்.

**நிரம்பவழகிய தேசிகர் :** சேதுப்புராணம் என்ற பெயருடன் செய்யுள் நூல் ஒன்று இயற்றியுள்ளார். சொல் நயம், பொருள் நயம் செறிந்த சிறந்த நூல். அதில் கடவுள் வாழ்த்து, அவை யடக்கம், திருநாட்டுச்சிறப்பு, கந்தமாதனச் சிறப்பு, நைமிசாரணியச் சிறப்பு இவை

குதிரைச் சொக்கர்



நீங்கலாக 46 சருக்கங்கள் இருக்கின்றன. அவைகளிலுள்ள பாடல்களின் தொகை 3438 ஆகும். இருபத்தாறு சருக்கங்களில் இராமேசுவரத்திலுள்ள தீர்த்தங்களின் பெருமை கூறப்பட்டிருக்கிறது: இந்நூலை, இராமநாதபுரம் அருங்கலை விநோதர் பொன்னுச்சாமித்தேவர் அவர்களின் வேண்டுகோளின்படி யாழ்ப்பாணம் ஆறுமுகநாலவர் அவர்கள் பதிப்பித்துள்ளார்கள்.

பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் என்பவர் தேவையுலா என்ற அரியநூலைச் செய்திருக்கிறார். உலா என்பது 'தமிழில் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களில் ஒன்று. பேதை முதலிய எழுவகைப் பருவமகளிர் தன்னைக் கண்டு காதல் கூரும்படி ஒரு தலைவன் பவனி போந்தானென்று அவனுடைய அரிய செயல்களைப் பலவகையாகப் புகழ்ந்து பாடப்படுவது. தேவையுலாவில் இராமநாதருடைய பெருங்கருணைத்திறமும், இராமேசுவரத்தல, தீர்த்தச் சிறப்புக்களும், வேறு தலபுராணக் கதைகளும், பழைய சிவபுராணங்களில் காணப்படும் அரிய வரலாறுகளும், நாயன்மார்களுடைய அற்புதச் செயல்களும் புலவர் அழகுபடச் சொல்லிச் செல்கிறார். இன்னும் இராமேசுவரத்தில் ஆரியர் 512 பேர்கள் இருந்தனரென்றும், பழங்காலத்திலும், பிற்காலத்தில் சேதுபதிகளாலும் செய்யப்பட்ட திருப்பணிகளைப்பற்றியும் கூறியிருக்கிறார். இந்த நூலாசிரியர் ஒவ்வொரு நயம்பட 24 தீர்த்தங்களையும் முறையே கூறியிருக்கும் அழகு கூர்ந்து உணர்ந்து இன்புறற்பாலது, அப்பகுதியை மாத்திரம் பிற்சேர்க்கை IX-ல் கொடுக்கப்பட்டிருக்கிறது. "அண்டருலகின்னு நடுங்குமிராவணனைக் கொன்ற பழிதன்னையகற்ற" என்ற குறிப்பையும் இவர் நூலில் காண்கிறோம். இந்த சிறந்த நூலை டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் பதிப்பித்திருக்கிறார்கள்.

முத்துவிஜயம்பிள்ளை யென்பவர் நிரம்ப அழகிய தேசிகர் இயற்றிய சேதுப்புராணத்தை ஒட்டி சேதுபுராண வசனம் என்ற நூலை எழுதியிருக்கிறார்.

வானமாமலைப்பிள்ளை யென்பவர் பல ஆண்டுகள் இராமேசுவரம் கோயிலின் பொருளாளராக இருந்தவர். சேதுவும் இராமேசுவரமும் என்ற அரிய ஆராய்ச்சி நூலொன்றை ஆங்கிலத்தில் எழுதியிருக்கின்றார்.

திருப்பனந்தாள் ஆதீன வெளியீடான "இராமேச்சுரம்", தருமபுர ஆதீன வெளியீடான "இராமேசுவர யாத்திரை', இராமலிங்கம்பிள்ளை யென்பார் பதிப்பித்த "இராமேச்சுரமான்மிய மென்னும் சேதுமகத்துவம்", வைத்தியநாத வாத்தியார் தொகுத்த "சேது சரித்திரச் சுருக்கம்" முதலிய உரைநடை நூல்கள் இத்தலத்தைப் பற்றியனவே.

## 10. கல்வெட்டுக்களும் செப்பேடுகளும்

இராமேசுவரம் கோயிலிலிருந்து பல கல்வெட்டுக்களை 1903, 1905, 1915 இந்த ஆண்டுகளில் அரசாங்கத்தார் படியெடுத்துப் பதிவு செய்திருக்கின்றனர். கல்வெட்டுக்கள் தமிழ், கன்னடம், சமஸ்கிருதம் முதலிய மொழிகளில் உள்ளன. சில செப்பேடுகளும் இருக்கின்றன. பாண்டிய மன்னர், நாயக்க மன்னர், சேதுபதிகள் இவர்கள் காலத்தவை அக்கல்லெழுத்துக்கள்.

அம்மன் சந்நிதியிலுள்ள தூண் உருவம் ஒன்றின் மேல் 'இரணிய கர்ப்பயாஜி விஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவர்' என்று பொறிக்கப்பெற்றிருக்கிறது. சுவாமி கோயில் முதல் பிரகாரத்திலிருந்து வெளிவரும் வாயிலிலுள்ள கதவுக்கு மேல்புறமுள்ள ஒரு கல்வெட்டில், சைவ ஆகமங்களில் வல்லவரான இராமநாதர் என்ற பெருந்துறவி அழிந்துபோன பிரகாரத்தைக் கட்டினார் என்று கூறப்படுகிறது. பள்ளியறையிலுள்ள வெள்ளி ஊஞ்சலின் முன்பக்கம் அது விஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவரால் அளிக்கப்பெற்றதென்றும், வெள்ளியின் நிறையும் மதிப்பும் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

மூன்றும் பிரகாரத்திலிருந்து அம்மன் கோயிலுக்குள் போகும் வழியிலுள்ள தூணிலிருக்கும் உருவத்தின்மேலே 'இரணியகர்ப்பயாஜி இரகுநாத சேதுபதி கட்டத்தேவர்' என்ற கல்லெழுத்துக் காணப்படுகிறது. முதற் பிரகாரத்தின் வடசுவரில், சகம் 1545 (கி. பி. 1623)ல் நடமாளிகை மண்டபம், அருத்தமண்டபம் இவைகளை உடையான் சேதுபதி கட்டத்தேவர் மகன் கூத்தன் சேதுபதி கட்டத் தேவர் கட்டியதாகக் கூறும் கல்வெட்டு இருக்கிறது. உருவச் சிலைகளில் வடுகநாத தேவர், பெரிய உடையாத் தேவர், இரகுநாதசேர்வைக்காரன், பிரதானி முத்து திருமலப்பபிள்ளை, இராஜராஜேசுவரிஅம்மன், சின்னணத் தேவர் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. பர்வதவர்த்தினியம்மன் சந்நிதியிலுள்ள கொடிமரத்தில் கோபதிப்பர் சகம் 1390 (கி. பி. 1468)ல் அதை நிலைநிறுத்தியதாகக் கூறும் எழுத்துக்கள் காணப்படுகின்றன. கோபதிப்பர் அல்லது திருமலையா என்பவர் கி. பி. 1453 முதல் 1468 வரை அரசப்பிரதிநிதியாக இருந்து திருவரங்கம், திருவானைக்கா, இராமேசுவரம் கோயில்களுக்குப் பல தானங்கள் செய்திருக்கிறார். இவர் காளமேகப்புலவர் காலத்தவர்.

இராமநாதர் கர்ப்பக்கிரகத் தென்சுவரில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்லெழுத்து விசுவநாத நாயக்க வீரப்ப நாயக்கர் ஐயன் நன்மைக்கு நிலதானம் அளித்ததைக் கூறுகிறது. அதே சந்நிதி முன் மண்டபத் தென்சுவரில் சகம் 1520 (கி. பி. 1598)ல் இராமநாதர் என்ற துறவியால் ஆடல் மண்டபம் கட்டியதைக் கூறும் கல்வெட்டுள்ளது. கோடி தீர்த்த மண்டபத்தின் மேற்குச் சுவரிலுள்ள ஒரு கல்வெட்டு அந்த மண்டபத்தை அதே துறவி கட்டியதாகக் கூறுகிறது. முதல் பிரகாரம் தென்புறச்சுவரிலுள்ள ஒரு கல்லெழுத்து அந்த பிரகாரம் சகம் 1545 (கி. பி. 1623)ல் கட்டியதை அறிவிக்கிறது. அதே சுவரிலுள்ள மற்றொரு சிலாசாசனம் சகம் 1530 (கி. பி. 1608)ல் இராமேசுவரத்

தில் மதுரை மன்னன் வீரபூபதி (வீரப்ப நாயக்கர்— கி. பி. 1609—23) காலத்தில் ஒரு கோயில் கட்டியதைக் குறிக்கிறது.

சிதம்பரநாராசத்தின் வடசுவர்க் கல்வெட்டொன்று முதல் பிரகாரம் கட்டியதைத் தெரிவிக்கிறது. சிதம்பரேசர் கோயில் மேற்குச் சுவரில் வீரபாண்டிய மன்னனின் கல்வெட்டு இருக்கின்றது. அம்மன் கோயில் சவுக்கையின் மேல்புறம் காணப்படும் கல்வெட்டு தருமகர்த்தர் பெரியநாயகம்பிள்ளை சகம் 1786 (கி. பி. 1864)ல் அதைக் கட்டியதாகக் கூறுகிறது. அம்மன் கோயில் கொடிமரத்தின் படியிலுள்ள ஒரு கல்வெட்டு அந்த கொடிமரத்தைச் சகம் 1785 (கி. பி. 1863)ல் நிலைபெறுத்தியதாகத் தெரிவிக்கிறது. இராமநாதர் கர்ப்பக்கிரகத்திற்கு நுழையும் வாயிலிலுள்ள கன்னடக் கல்வெட்டு இராமநாதருக்குக் கவசம் அளிக்கப்பட்டதை அறிவிக்கிறது. அதே இடத்தில் இடதுபுறம் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியனின் பதினோராம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் காணப்படுகிறது.

**செப்பேடுகளில் காணப்படுபவை:** முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவர் சகம் 1692 (கி. பி. 1770)ல் மக்களுக்கு உணவளிக்கவும் தண்ணீர்ப்பந்தல் வைக்கவும் நிலக்கொடை வழங்கினர். திருவுடையாத் தேவர் என்ற முத்துவிஜயரகுநாத சேதுபதி கட்டத்தேவர் (கி. பி. 1709-23) அத்தியூத்தென்ற ஊரில் 14 பிராமணக் குடும்பங்களுக்கு வீடுகளும் நிலங்களும் அளித்தார். திருமலை இரகுநாத சேதுபதி கட்டத்தேவர் (கி. பி. 1645—70) கௌண்டினிய கோத்திரத்து அகோபலையாவுக்கு நிலம் வழங்கினர். தளவாய் சேதுபதி கட்டத்தேவர் (கி. பி. 1604—21) இராமநாதசுவாமி கோயிலுக்கு ஐந்து ஊர்களை அளித்தார். அவரே மேலும் எட்டு கிராமங்களைக் கோயிலுக்குக் கொடுத்தார். நந்தன ஆண்டில் தருமகர்த்தர் இராமநாத பண்டாரமும் இராமேசுவரம்

கோயில் ஆரிய மகாஜனங்கள் 512 பேர்களும் ஒரு உடன் படிக்கை எழுதிக்கொண்டார்கள்.

இன்னும் பல சேதுபதிகள் காலத்தில் குருக்கள் முதலியவர்களுக்கு நிலம், ஊர்கள் வழங்கியது, வருகிற யாத்திரிகட்கு வசதிசெய்து கொடுக்க ஏற்பாடு செய்தது, பட்டர்களுக்கு உரிமைகள் கொடுத்தது, கோயிலுக்கு பூசை, திருவிழாக்கள் நடைபெறக் கிராமங்கள் தானம் செய்தது, கோயிலில் விளக்கெரிக்க எண்ணெய்க்கு ஏற் பாடு செய்தது, முத்துவிஜயம் சேர்வை என்பவர் சேது மன்னருடைய யானையின் வாலைப்பிடித்து இழுத்த வீரச் செயலுக்காக நாள்தோறும் கோயிலிலிருந்து அமுதளிக்க உத்திரவு செய்தது முதலியவற்றைக் கூறும் பட்டயங் களும் இருக்கின்றன.

## 11. பூசை நடைமுறை

கோயிலில் நாள்தோறும் ஆறுகாலமும் வழிபாடு மிகச் சிறப்பாக நிகழ்கின்றது. அடியார்கள் செய்விக்கும் ஆராதனைகளும் ஏராளமாக நடைபெறுகின்றன. முறைப் படி நிகழும் ஆறுகாலங்களாவன :

1. திருவனந்தல் காலை 4 மணி முதல் 5 மணி வரை.
2. விளாபூசை (உதயமார்த்தாண்ட பூசை) சூரிய எழுச்சிக்குப்பின்
3. காலசந்தி பூசை காலை 9 மணிக்குமேல்
4. உச்சிக்கால வழிபாடு நடுப்பகலில்
5. சாயுந்தர பூசை அந்திப்பொழுதில்
6. அர்த்தசாம பூசை இரவு 9 மணிக்குமேல்

திருவனந்தல் வழிபாட்டில் பள்ளியறையின் திருப் பூட்டுத் திறக்கப்பட்டுத் தீபாராதனை நடைபெறும். பின்பு மிகப் பழமையானதும் தங்கத்தால் வார்க்கப்பட் டதுமான பள்ளியறைச்சுவாமி பல்லக்கில் எழுந்தருளி

மூலத்தானத்தை அடைந்ததும் ஸ்படிகலிங்கத்திற்கு அபிடேக தீபாராதனைகள் நடைபெறும். இதை வட நாட்டினர் மணிமூர்த்தி தரிசனம் எனச் சிறப்பாகப் போற்றித் தரிசிப்பார்கள். திருவிழாக் காலங்களில் திருவனந்தல் வழிபாட்டின் நேரம் மாறுபடும்.

## 12. திருவிழாக்கள்

இராமலிங்கப்பெருமானது திருக்கோயிலில் ஆண்டு தோறும் மூன்று திருவிழாக்கள் ஆனி, ஆடி, மாசி மாதங்களில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன. இவை பெருந்திருவிழாக்கள். இவையன்றிச் சிறிய திருவிழாக்களும் அவ்வப்போது நடைபெறுகின்றன. இவற்றைப் பார்த்துப் பரவசமடைந்து மகிழ ஏராளமான அடியார்கள் நாடெங்கிலும் இருந்து வருகிறார்கள். வைகாசி மாதத்தில் இங்கு வசந்தவிழா நடைபெறுகிறது. இவ்விழாவின்போது ஒவ்வொரு நாளும் சுவாமியும் அம்மையும் அலங்காரங்களோடு எழுந்தருளி மூன்றாவது திருச்சுற்றிலுள்ள மாதவ தீர்த்தம் என்னும் பெரிய குளத்தின் கரையில் உலாவரும் காட்சி நடைபெறும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமை இரவும் நவசக்தி மண்டபத்தில் அம்மை கொலுவீற்றிருந்து பூசை வழிபாடுகளை ஏற்பாள். பிறகு வேதங்களும், தேவார திருவாசகத் தீந்தமிழ்ப் பாசுரங்களும் முழங்க, மேளம் ஒலிக்கத் தங்கப்பல்லக்கில் எழுந்தருளி திருச்சுற்றில் உலாவருவாள். விழாக்களைப் பற்றிய விரிவான பட்டியல் பிற்சேர்க்கையில் உள்ளது கண்டுகொள்க.

கோயில் நாள்தோறும் காலை 5 மணியிலிருந்து பகல் 12 மணி வரையிலும், மாலை 4-30 முதல் இரவு 10 மணி வரையிலும் திறந்திருக்கும், அடியார்கள் இந்த நேரத்தில் வந்து தத்தம் ஆற்றலுக்குகந்தவாறு ஆராதனைகள் நடத்துவித்து மகிழ்வெய்தலாம்.

## 13. காணிக்கை பற்றிய குறிப்புக்கள்

(1) யாத்ரீகர்கள் சுவாமி அம்மைக்கு காணிக்கை யாகக் கொண்டுவரும் தங்கம், வெள்ளி முதலியவற்ருல் செய்யப்பட்ட திருவாபரணம், வில்வபத்ரம், திரிசூலம், குடை, நாகர் முதலிய விலேயுயர்ந்த பொருள்களேயும் மற்றும் அர்ச்சிக்கக் கொண்டுவரும் நைவேத்திய சாமான் களேயும் முதலில் பேஷ்கார் ஆபீசில் காட்டி அவைகளுக் குரிய சீட்டுக்களே (டிக்கட்டுகளே) வாங்கி மேற்படிசீட்டுக் களுடன் அவைகளே கோயிலில் சந்நிதி வாசல்காரர்களிடம் ஒப்பிவிக்கவேண்டியது. அவ்விதம் சீட்டுக்கள் பெற்று வராத எந்த சாமான்களேயும் வாசல்காரர் வகையராவா வது, குருக்கள்களாவது வாங்கி சாத்துபடி செய்யக் கூடாது. சாத்துபடி ஆனபின் மேற்படி சாமான்களே கோயில் கணக்குகளில் பதிவு செய்து கொள்வார்கள்.

(2) கோயிலுக்கு நிலமோ அல்லது வேறுவகையான மானியமோ வழங்க விரும்புவோர் கோயில் பொருளாள ரைப் பார்த்து அவரிடம் முழுவிவரத்தையும் அறிந்து கொண்டு அதன்பிறகு தருமகர்த்தர் மூலமாக வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொள்ளலாம்.

(3) இராமலிங்கரின் அபிடேகத்திற்குக் கங்கை நீர் கொண்டுவருபவர்கள் உலோகங்களினுலான பாத்திரங் களில் மட்டுமே கொண்டுவரவேண்டும். இரும்பு, தகரம், கண்ணுடி முதலியவற்ருலாகிய பாத்திரங்கள் உதவா. அவற்றில் கொண்டுவந்தால் பேஷ்கார் முன்னிலேயில் அந்நீரை உலோகத்தால் ஆகிய பாத்திரங்களுக்கு மாற்ற வேண்டும். பிரயாகை, அரித்துவாரம் முதலிய இடங்களி லிருந்து கொண்டுவரப்படும் கங்கை நீர் ஏற்றுக்கொள்ளப் படும். நேரில் வந்து கங்கையாற்று நீரை இராமநாதப் பெருமானுக்கு நேரில் அபிஷேகம் செய்விக்க இயலாத வர்கள் அந்நீரைத் தபால் மூலமாக அனுப்பலாம். இவ்வாறு அனுப்புவோர்கள் ரூ. 2 கட்டணமாக அனுப்புவதோடு

தமது கோத்திரம், நட்சத்திரம் ஆகியவற்றைக் குறித்துக் கடிதமும் எழுதவேண்டும். மகாசிவராத்திரி போன்ற சிறப்பு நாட்களில் அபிடேகம், பூசை முதலியவை செய்ய விரும்புவோர் இரண்டு வாரங்கட்கு முன்பாகவே அவற்றிற்கு உரிய தொகையைச் செலுத்தவேண்டும். கங்கை நீரைக் கொண்டுவரும் யாத்ரீகர் கோயில் அலுவலகத்தில் ரூ. 2 நேரில் செலுத்திச் செலுத்துச்சீட்டு (ரசீது) பெற்று அதனை அருச்சகரிடம் காண்பித்துத் தீர்த்தத்தைக் கொடுத்தால் அவர் சுவாமிக்கு அபிடேகம் செய்து வைப்பார். இவ்வபிடேகம் நாள்தோறும் காலை முதல் அர்த்தயாம வழிபாட்டில் சந்தனக் காப்பு செய்யப்படும் வரை நடத்த இயலும். சிவராத்திரியன்று மட்டும் பகலும் இரவும் இடையறாது கங்கை நீர் அபிடேகம் செய்யப்படும். கங்கை நீர் கொண்டுவர முடியாத நிலையில் உள்ள அடியார்கள் அவ்வபிடேகத்தைச் செய்வித்துப் பலன்பெற விரும்பினால் பேஷ்கார் அலுவலகத்தில் கங்கைநீரை விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம். சுமார் 1/16 (வீசம்) படி அளவுள்ள கங்கைநீரின் விலை ரூ. 1 ஆகும். யாத்ரீகர் விலைக்குப் பெறும் கங்கைநீர் அளவிற்கு பாத்திரமும் விலைக்கு வாங்க வேண்டும். அபிடேகத்திற்குப்பின் பாத்திரத்தைத் திரும்பப் பெறமுடியாது. அது கோயிலுக்குச் சொந்தமாகி விடும்.

## (4) அபிடேகக் கட்டணங்கள்

சுவாமிக்கும் அம்மைக்கும் அபிடேகம் நடத்துவிக்க விரும்பும் அடியார்கள் கீழ்க்கண்ட கட்டண விகிதப்படி தமது விருப்பம்போல் பணம் செலுத்தி நடத்துவித்து மகிழலாம்.

1. ருத்ராபிஷேகம் பிரசாதத்துடன் (ருத்ரஜெபம், கங்காபிஷேகம் உள்பட) ரூ. 50—00

| | | |
|---|---|---|
| 2. | பஞ்சாமிர்த அபிஷேகம் (கங்காபிஷேகம் உள்பட) | ரூ. 22—50 |
| 3. | உபயாபிடேகம்—பிரசாதத்துடன் | ரூ. 10—50 |
| 4. | உபயாபிடேகம்—பிரசாதத்துடன் | ரூ. 6—00 |
| 5. | உபயாபிடேகம்—பிரசாதத்துடன் | ரூ. 5—25 |

மேற்கண்ட அபிடேகங்கள் ஸ்ரீ இராமநாதர், விசுவநாதர், பர்வதவர்த்தினி அம்மை, விசாலாட்சி அம்மை ஆகிய தெய்வங்கட்கு நடக்கும்போது பால், தேன், சந்தனம், பஞ்சாமிர்தம் ஆகியவையும் அபிடேகப் பொருள்களாக இருக்கும். கோயிலில் நாள்தோறும் நடைபெறும் விளாபூசை, காலசந்தி, உச்சிக்காலம், சாயுங்கால பூசை, அர்த்தசாமம் ஆகிய வழிபாட்டுக் காலங்களிலும் இத்தெய்வங்கட்கு பால், தேன், சந்தனம், பஞ்சாமிர்தம் ஆகியவை அபிடேகம் செய்யப்படும். அபிடேகம் முடிந்தவுடன் அதை நடத்துவித்தவர்கள் தமக்குரிய பிரசாதங்களை மடைப்பள்ளியில் பெற்றுக்கொள்ளலாம். அபிடேகம் நடத்தாதவர்களும் பிரசாதங்களை விலைக்குப் பெறலாம். மடைப்பள்ளி அம்மன்சந்நிதி வாசலுக்கருகில் இருக்கிறது. பஞ்சாமிர்த அபிடேகத்திற்கும், ருத்திராபிடேகத்திற்கும் முறையே ரூ. 4, ரூ. 6 விலையுள்ள கங்கை நீர் கோயில் அலுவலகத்திலிருந்து கொடுக்கப்படுகிறது. இவ்விலைத் தொகை அபிடேகங்களுக்காகச் செலுத்தும் கட்டணத்தொகையில் அடங்கியதே. பாலாபிடேகம் மட்டும் செய்விக்க விரும்புவோர் கோயிலிலேயே பால் படி ஒன்றுக்கு ரூ. 1-50 வீதம் விலை செலுத்திப் பெறலாம். அருச்சனை செய்ய விரும்புவோர் கீழ்க்கண்ட முறைப்படி கட்டணங்கட்டி அருச்சனை சீட்டுப்பெற்று அர்ச்சகரிடம் தேங்காய் பழம் முதலியவற்றோடு கொடுக்க வேண்டும்.

## (5) அருச்சனைக் கட்டணங்கள்

சகஸ்ரநாம அர்ச்சனை (நைவேத்யம் உள்பட)

அர்ச்சனைக்கு ரூ. 1-25 நைவேத்தியத்
திற்கு ரூ. 2-00 ஆக ரூ. 3—25

திருசதை அர்ச்சனை 308 நாமாவளிகள்
(பாயாசநைவேத்தியத்துடன்) ரூ. 1—50

அஷ்டோத்ர அர்ச்சனை 108
நாமாவளிகள் ரூ. 0—35

குறிப்பு :—மேலேகண்ட அர்ச்சனைகளுக்கான தேங்காய் பழம் முதலியவற்றை யாத்ரீகர்களே வாங்கிவர வேண்டும்.

## (6) எழுந்தருளல் நடத்தக் கட்டணங்கள்

1. வெள்ளி ரதத்தில் புறப்பாடு ரூ. 500—00
2. பஞ்சமூர்த்தி புறப்பாடு ரூ. 200—00

பஞ்சமூர்த்தி எழுச்சியில் சுவாமி அம்மை உள்பட பஞ்சமூர்த்திகள் தங்கம் வெள்ளி வாகனங்களில் எழுந் தருளி நான்கு இரதவீதிகளிலும் உலாவருவார்கள். வெள்ளி இரத புறப்பாட்டில் சுவாமியும் அம்மையும் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளி இரதத்தில் வீற்றிருந்தருளி நான்கு இரதவீதிகளில் உலாவருவார்கள். உலாமுடிவில் இவற்றை நடத்துவித்தவர்க்குக் கோயிலில் மாலை அணிவித்து மரியாதை செய்யப்படும்.

சுவாமிக்கும் அம்மைக்கும் மலர் மாலை சாத்தி வழி படலுக்கு எவ்வகைக் கட்டணமும் கிடையாது. பழம் முதலிய பொருள்கள் நைவேத்தியம் செய்வதற்கும், காவடி, முடி, கல்யாணம் முதலியவற்றிற்கும் காணிக்கை செலுத்தவேண்டும். அர்ச்சனைக்கு உதவும் தேங்காய்,

பழம், சூடன் முதலிய பொருள்கள் அனைத்தும் கோயில் மேலவாயிலிலும் கீழ வாயிலிலும் உள்ள கடைகளில் விற்கப்படுகின்றன. மேலவாயிலில் படங்கள், பொம்மைகள், பலவகைச் சங்குகள், சிப்பிகள், சோழிகள், பவளங்கள், பனைஓலைப்பெட்டிகள் முதலியவை ஏராளமாக விற்கும் கடைகளும் உள்ளன.

சுவாமி, அம்மை புறப்பாட்டிற்கெனச் செய்த தங்க, வெள்ளி வாகனங்கள் கோயிலில் ஏராளமாக இருக்கின்றன. விலையுயர்ந்த திருவாபரணங்களும் உள்ளன. இவற்றைப் பார்க்க விரும்புவோர் முறையே வாகனக் காட்சிக்கு ரூ. 3-ம், திருவாபரண தரிசனத்திற்கு ரூ. 15-ம் செலுத்தவேண்டும். இத்தொகைகளை பொருளாளரிடம் முன்னதாகவே செலுத்திவிடவேண்டும். கோயிலில் உள்ள வாகனங்களின் பட்டியல் இந்நூலின் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளது.

கோயில் அமைப்பு, பூசை, வழிபாடு ஆகியவைபற்றிய சுருக்கமான குறிப்புக்களே இதுவரையில் தரப்பட்டன. விரிவான விளக்கம் வேண்டுவோர் அறங்காவலர் அல்லது துணையதிகாரிகளிடம் கேட்டுத் தெரிந்துகொள்க.

## சேதுபதிகள்

புண்ணிய சேதுவை நினைக்குங்கால் அதன் காவலர்களாய் பன்னெடுங்காலமாக வாழ்ந்துவரும் சேதுபதிகளின் நினைவு நம்மனக்கண்முன் ஓடிவருகிறது. அவர்கள் புராண மரபுப்படி குகனுடைய பரம்பரையைச் சார்ந்தவர்களாவர். சேதுபதிகள் தென்னிந்தியாவில் ஆற்றலும் ஆண்மையும் வாய்ந்து விளங்கிவரும் மறவர் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். இராமபிரான் குகனுக்கு முதல் சேதுபதி பட்டத்தினைச் சூட்டியதும் பாண்டிய மன்னன் அவனுக்குக் கடற்கரை ஓரத்தில் இருக்கும் எல்லாக் காடுகளையும் மானியமாக அளித்தான் என்று கூறப்படுகிறது. சேது

பதிகள் பாண்டிய மண்டலத்திற்கும் சோழ மண்டலத்திற்கும் எல்லைக்காவலராக இருந்தனரென்றும், தொண்டையன்கரைக்கும் அவர்களே காவலர் என்றும் பழங்காலச் செப்புப் பட்டயங்களால் அறிகிறோம். அவர்களுடைய கொடியில் அனுமானும் கருடனும் பொறிக்கப்பட்டிருந்ததாகவும் தெரிகிறது. நெடுநாட்களாக இராமேசுவரம் கோயிலில் வாசிக்கப்பட்டுவரும் சேதுபதி பட்டயங்களிலிருந்து அவர்களின் வீரம், பெருமை, உயர்வு யாவும் வெளிப்படுகின்றன.

## கி. பி. 1600க்கு பின்வந்த சேதுபதிகளின் வரிசையும் அவர்கள் செய்த சிறந்த செயல்களும்

1. கி. பி. 1605—21 சடைக்கத்தேவர் உடையான் சேதுபதி. இவர் இராமேசுவரம் கோயிலுக்குச் சில கிராமங்களை நன்கொடையாக அளித்துள்ளார்.

2. கி. பி. 1622—35 குட்டன் சேதுபதி. இவர் இராமேசுவரம் கோயிலில் சில கட்டிடங்கள் கட்டித் திருப்பணி செய்துள்ளார்.

3. கி. பி. 1635—46 இரண்டாம் சடைக்கதேவர் என்ற தளவாய் சேதுபதி.

4. கி. பி. 1647—72 இரகுநாத திருமலை சேதுபதி. இவர் இராமேசுவரம் கிராமத்தைச் சீர்படுத்தியமைத்துக் கோயிலிலும் திருப்பணி இயற்றினார். மேலும் அனேக அறப்பணிகளுக்கு நன்கொடை யளித்திருக்கிறார்.

5. கி. பி. 1672 இராஜா சூரிய சேதுபதி.

6. கி. பி. 1673 அதான ரெகுநாத சேதுபதி.

7. கி. பி. 1674—1710 கிழவன் (ரகுநாத) சேதுபதி. 1702-ல் இவர் மதுரை, தஞ்சாவூர் மன்னர்களின் படைகளைப் போரில் தோற்கடித்தார். பின்னர் ஒருமுறை

தஞ்சாவூர் சேனைகளைப் புறங்கண்டார். 1694-ல் மன்னர் விரிகுடாவில் முத்து எடுப்பது குறித்து டச்சுக்காரர்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார். 1709-ல் புதுக்கோட்டையைத் தலைநகராகக் கொண்ட ஒரு சிறு அரசை ஏற்படுத்தி அதனைத் தன் மனைவியின் சகோதரனுக்கு அளித்தார். தமது தலைநகரை போகலூரிலிருந்து இராமநாதபுரத்திற்கு மாற்றினர். புகழ்பெற்ற இராமலிங்க விலாசம் என்னும் மாளிகையைக் கட்டினர்.

8. கி பி. 1711—1725 விஜய ரெகுநாதசேதுபதி (திருவண்டயத்தேவர்). இவர் இராமேசுவரம் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனிடம் மிகுந்த பக்தி கொண்டார். அக்கோயிலுக்கு ஏராளமான மான்யங்கள் அளித்தார். இராமநாதபுரத்திலிருந்து நாள்தோறும் குதிரை மீதேறி இராமேசுவரத்திற்கு வந்து இறைவனை வழிபட்டுச் செல்வது இவர் வழக்கம் என்று கூறப்படுகின்றது.

9. 1726 சுந்தரேசுவர இரகுநாத சேதுபதி.

10. 1727—1729 பாணி சங்கர் சேதுபதி.

11. 1730—1735. கட்டயத்தேவர் என்ற முத்து விஜய இரகுநாததேவர். இவருக்குப்பின் இராமநாதபுர சமஸ்தானத்தின் பரப்பளவு குன்றிவிட்டது. தஞ்சாவூர் அரசாங்கம் ஒருபகுதியையும் சசிவண்ணு என்பவர் சிவகெங்கைப் பகுதியையும் எடுத்துக்கொண்டனர். முன்னைய இராமநாதபுரம் சமஸ்தானத்தில் 3/5 பாகமே எஞ்சி நின்றது. கட்டயத்தேவர் கோயில்கள் பலவற்றிற்குத் தர்மாசனங்களும் மான்யங்களும் அளித்ததோடு பல சத்திரங்களையும் கட்டுவித்தார்.

12. 1736—1748 சிவகுமாரமுத்துவிஜய இரகுநாத சேதுபதி. இராமேசுவரம் கோயிலின் மூன்ருவது திருச்சுற்றின் கட்டிட வேலை இவரால் தொடங்கப்பெற்றது.

13. 1748—1749 சேதுபதி இராஜதேவர்.

14. 1749—1762 செல்லத்தேவர்.

15. 1763—1772 முத்துராமலிங்க சேதுபதி.

16. 1803—1807 இராணிமங்களேசுவரி நாச்சியார். இவர் மேற்கண்ட முத்துராமலிங்கரின் சகோதரி. தனது நன்னடைத்தையால் இராமநாதபுரம் ஜமீனை ஆங்கில அரசினரிடமிருந்து திரும்பப்பெற்ருர். இவர் பல அற மான்யங்களும் 96 அறச்சாசனங்களும் அளித்துள்ளார்.

17. 1809—1820 அய்யாச்சாமி சேதுபதி.

18. 1820—1830 விஜய ரெகுநாத இராமசுவாமி சேதுபதி. இவர் இராமேசுவரம் கோயிலுக்கு ஏராளமாக மான்யங்கள் அளித்துள்ளார்.

1830—1840 முத்துச்செல்லத்தேவர் என்பார் சமஸ்தானத்தில் நிருவாகம் நடத்திவந்தார். 1840-1846-ல் ஆங்கில அரசினரின் கோர்ட் ஆப் வார்ட்ஸ் நிருவகித்தது.

19. 1846-1862 இராணிபர்வதவர்த்தனி நாச்சியார்.

20. 1862—1873 முத்துராமலிங்க சேதுபதி.

21. 1873—1903 பாஸ்கரசாமி சேதுபதி.

22. 1910—1928 இராஜராஜேசுவர சேதுபதி என்ற முத்துராமலிங்க சேதுபதி.

23. 1928—இராஜா சண்முகராஜேஸ்வர நாகநாத சேதுபதி. இவரே தற்போதைய இராமநாதபுரம் சேதுபதி.




சேதுபதி கடம்பத்தேவர்

## பிற்சேர்க்கை—I

# திருவிழாக்களும்—வாகனங்களும்

### இராமேசுவரம் கோயிலில் ஆண்டுதோறும் நிகழும் திருவிழாக்கள்

| எண் | திருவிழா | தொடக்கம் | முடிவு | நாட்கள் |
|---|---|---|---|---|
| 1. | மகா சிவராத்திரி | மாசிமாதம்-கிருஷ்ண<br>பக்ஷத் தொடக்கம்<br>(பிப்ரவரி-மார்ச்) | மாசிமாதம்<br>அமாவாசை | 10 |
| 2. | வசந்தத் திருவிழா | வைசாகம்—சஷ்டி<br>(மே-ஜூன்) | வைசாகம்<br>பௌர்ணமி | 10 |
| 3. | ஸ்ரீஇராமலிங்கப்<br>பிரதிஷ்டை விழா | ஜேஷ்டசுக்ல சுத்தசஷ்டி<br>(ஜூன்-ஜூலை) | ஜேஷ்ட<br>பௌர்ணமி | 3 |
| 4. | திருக்கல்யாணவிழா<br>முக்கிய நாட்கள்.<br>1. இடபவாகனத்தில் எழுந்தருளல்.<br>2. இரதத்தில் உலாவ வருதல்<br>3. அம்பாள் தபசு<br>4. தங்கப்பல்லக்கில் மலர் அலங்காரத் துடன் அம்பாள் சயனசேவை<br>5. திருக்கல்யாணம் | ஆஷாடபகுள<br>கிருஷ்ணுஷ்டமி.<br>(ஜூலை-ஆகஸ்ட்டு) | சிராவண<br>சுத்தம். | 17 |
| 5. | நவராத்திரி விழா | பாத்ரபாதசுத்த<br>சுக்ல பிரதமை | தசமி | 10 |
| 6. | கந்தசஷ்டி விழா<br>சஷ்டி தினம்<br>சூரசம்மாரம். | ஆஸ்வயாக சுத்த<br>சுக்ல பிரதமை. | ஆஸ்வயாக<br>சுத்தசஷ்டி. | 6 |
| 7. | ஆருத்திரா தரிசனவிழா<br>விழா முடிவில் ஆருத் திரா தரிசனம். | மார்க்க சீர்ஷ சுத்த<br>சஷ்டிசதய நட்சத்திரமும்<br>மார்கழி மாதம். | மார்க்க<br>சீர்ஷசுத்த<br>பௌர்ணமி | 10 |

மேலே கண்ட திருவிழாக்கள் தவிர மாதந்தோறும், வாரந்தோறும் கொண்டாடப்படும் திருவிழாக்கள் வருமாறு :—

1. மாதக் கார்த்திகை—இரவு 8 மணி யளவில் ஸ்ரீ சுப்ரமணியசுவாமி வெள்ளி மயில் வாகனத்தில் நான்கு ரதவீதிகளிலும் உலாவருதல்.

2. ஒவ்வொரு பட்சத்திலும் பிரதோஷ நாள்தோறும் (மாலை 5-6 மணி) சுவாமி தங்க ரிஷபவாகனத்தில் மூன்றும் திருச்சுற்றில் உலாவருதல்.

3. வாரந்தோறும் வெள்ளிக்கிழமையன்று 8 மணி முதல் 9 மணிக்குள் ஸ்ரீ அம்பாள் தங்கப் பல்லக்கில் எழுந்தருளி மூன்றும் திருச்சுற்றில் உலாவரும் தெய்விகக் காட்சி.

4. தை மாதம் மகா சங்கராந்தி நாள், சித்திரை மாதம் முதல் தேதியாகிய தமிழ் ஆண்டுப் பிறப்பு நாள், கார்த்திகை மாதத் திருக்கார்த்திகை நாள், தை மாதம் பௌர்ணமியில் பூசநட்சத்திரத்தில் தெப்பத் திருவிழா ஆகிய நாட்களில் சுவாமியும் அம்பாளும் தங்க இடப வாகனத்தில் அமர்ந்து பஞ்சமூர்த்திகள் சூழப் புறப்பட்டுக் காட்சி கொடுப்பார்கள். தெப்பத் திருவிழா அன்று இறைவனும் அம்பிகையும் தெப்பத்தில் எழுந்தருளுவார்கள். தெப்பம் கோயில் மேற்கிலுள்ள இலட்சுமண தீர்த்தத்தில் நடைபெறுகிறது. தெப்பத்தில் படகுகள் கொடுத்துதவும் மரக்காயர்களுக்கு ரூபாயைத் தவிர சந்திரப்பாடி மடி சம்பாவனையும் முதலில் செய்யப்படுகிறது.

5. அர்த்தோதயம்—தை மாதம் அல்லது மாசி மாதம் அமாவாசை, ஞாயிற்றுக்கிழமை, சிரவண (திருவோண) நட்சத்திரம், விதிபாதம் அர்த்தோதயம் (27 யோகங்களில் ஒன்று) இவைகள் கூடினுல் அர்த்தோதயம். (1948ல் கடைசியாக வந்தது)

6. மகோதயம்— மேற்கண்ட மாதம், திதி, நட்சத்திரம் முதலியவைகளுடன் கூடி திங்கட்கிழமையில் வந்தால் அதனை மகோதயம் என்பர்.

இந்த நாட்களில் ஸ்ரீ இராமநாதசுவாமிகள் பஞ்சமூர்த்திகள் தங்க விருஷப வாகனத்தில் தனுஷ்கோடியில் தீர்த்தம் கொடுத்தருள எழுந்தருளுவார்கள்.



# மாசி—மகாசிவராத்திரி விழா

## (பிப்ரவரி மாதம்)

### வாகனங்கள் கேடகங்கள் ஆகியவற்றின் விபரம்

| திருநாள் | பகல் | | இரவு | |
|---|---|---|---|---|
| | சுவாமி | அம்பாள் | சுவாமி | அம்பாள் |
| 1 | | | நந்திவாகனம் | அன்னவாகனம் |
| 2 | தங்கக் கேடகம் | தங்கக் கேடகம் | கற்பக மரம் | காமதேனு |
| 3 | ,, | ,, | பூதவாகனம் | கிளிவாகனம் |
| | காலையில் கந்தமாதனபர்வதம் மண்டகப்படிக்கு எழுந்தருளி இரவு திரும்புதல். | | | |
| 4 | ,, | ,, | கைலாசவாகனம் | சிம்மவாகனம் |
| 5 | ,, | ,, | யானை வாகனம் | யானை வாகனம் |
| 6 | ,, | ,, | இடப வாகனம் | இடப வாகனம் |
| 7 | ,, | ,, | தங்கப்பல்லக்கில் முத்தங்கி சேவை | |
| | | | இந்திரவிமானம் | இந்திர விமானம் |
| 8 | இந்திர விமானம் | இந்திர விமானம் | குதிரை வாகனம் | குதிரை வாகனம் |
| 9 | இரதம் | | வெள்ளி இரதம் | |
| 10 | ஏகசிம்மாசனம் | | இடப வாகனம் | இடபவாகன |
| 11 | பிக்ஷாடனர் | | தங்கக்கேடகம் | |
| 12 | சண்டேசுவரர் | | தங்கக்கேடகம் | |

# ஆடித்திருக்கல்யாண விழா

## (ஜூலை—ஆகஸ்டு)

### வாகனங்கள், கேடகங்கள் பற்றிய விபரம்

| திருநாள் | பகல் | | இரவு | |
|---|---|---|---|---|
| | சுவாமி | அம்பாள் | சுவாமி | அம்பாள் |
| 1 | | | | தங்கக் கேடகம் |
| 2 | | தங்கப் பல்லக்கு | | காமதேனு வாகனம் |
| 3 | | ,, | | அன்னவாகனம் |
| 4 | | ,, | | சிம்ம வானம் |
| 5 | | ,, | | யானை வாகனம் |
| 6 | | ,, | | இடப வாகனம் |
| 7 | | ,, | | வெள்ளி இரதம் |
| 8 | | ,, | | குதிரை வாகனம் |
| 9 | | இரதம் | | கிளி வாகனம் |
| 10 | | தங்கப் பல்லக்கு | | |
| 11 | இடபவாகனம் | வெள்ளி தாமரை வாகனம் | | தங்கப் பல்லக்கு (மலர் அலங்காரத்துடன்) |
| 12 | | | திருக்கல்யாண விழா | |
| 13 | | | திருஊஞ்ல் | |
| 14 | | | திருஊஞ்சல் | |
| 15 | | | ஏக சிம்மாசனம் | |
| 16 | | | நந்தி வாகனம் (பட்டணப் பிரவேசம்) | யானை வாகனம் |
| 17 | தங்கக் கேடகம் | தங்கக் கேடகம் | கந்தமாதன பருவதம் மண்டகப்படி (வதூ கிரகப்பிரவேசம்) | |

# ஆனி—இராமலிங்கப் பிரதிட்டை விழா

## (சூலை மாதம்)

### வாகனங்கள், கேடகங்கள் பற்றிய விபரம்

| திருநாள் | பகல் | | இரவு | | |
|---|---|---|---|---|---|
| | சுவாமி | அம்பாள் | சுவாமி | அம்பாள் | |
| 1 | இராவண சம்மாரம் | | இராமர் தங்கக் கேடகம் | | மாலை கடைத் தெரு திட்டக் குடியில் இராவண சம்மார விழா நடைபெறும். |
| 2 | விபீடணர் பட்டாபிடேகம் | | ...... ஸ்ரீ ராமர் தங்கக் கேடகத்தில் எழுந்தருளி கோதண்டராமர் கோயிலில் விபீடணருக்கு பட்டம் கட்டும் விழா நடைபெறும். | | |
| 3 | இராமலிங்கப் பிரதிட்டை விழா (இரவில்)<br>சுவாமி—தங்க இடபவாகனம்<br>அம்பாள்—தங்க இடப வாகனம்<br>ஸ்ரீராமர்—வெள்ளி இரதம்<br>விநாயகர்—தங்க சிம்ம வாகனம்<br>சுப்ரமணியர்—தங்கக்குதிரை வாகனம்<br>நந்திவேசுவரர்—தங்கக் கேடகம்<br>சண்டிகேசுவரர்—தங்க (பிரதோஷ) இடபவாகனம். | | ...... காலையில் இராமலிங்கப் பிரதிட்டை வரலாறு அடங்கிய விழா. சிறப்பு நிகழ்ச்சிகள் பூசை வகையரு நடைபெறும். | | |

## திருவிழாக்காலங்களில் புறப்பாட்டிற்குறிய வாகனங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தங்கப் பல்லக்கு | | |
| 2. | ,, | கேடகம் | சுவாமிக்கு |
| 3. | ,, | ,, | அம்பாளுக்கு |
| 4. | ,, | ,, | சுப்ரமணியருக்கு |
| 5. | ,, | ,, | விநாயகருக்கு |
| 6. | ,, | குதிரை | சுவாமிக்கு |
| 7. | ,, | ,, | அம்பாளுக்கு |
| 8. | ,, | சிம்மம் | அம்பாளுக்கு |
| 9. | ,, | காமதேனு | அம்பாளுக்கு |
| 10. | ,, | நந்தீசுவரர் | சுவாமிக்கு |
| 11. | ,, | இடபவாகனம் | பிரதோஷ இடபம் |
| 12. | ,, | ,, | சுவாமிக்கு |
| 13. | ,, | ,, | அம்பாளுக்கு |
| 14. | ,, | கருடன் | ஸ்ரீ இராமருக்கு |
| 15. | வெள்ளி இரதம் (மின்விளக்குடன்) | | |
| 16. | வெள்ளி கைலாச வாகனம் (தங்கத்தாலான இராவணன் உருவத்துடன் கூடியது) | | |
| 17. | வெள்ளி யானை | | சுவாமிக்கு |
| 18. | ,, | ,, | அம்பாளுக்கு |
| 19. | ,, | அன்னம் | ,, |
| 20. | ,, | கமலவாகனம் | ,, |
| 21. | ,, | மூஷிகவாகனம் | கணேசருக்கு |
| 22. | ,, | மயில்வாகனம் | சுப்பிரமணியருக்கு |
| 23. | ,, | கிளிவாகனம் | அம்பாளுக்கு |
| 24. | ,, | கற்பக மரம் | சுவாமிக்கு |
| 25. | ,, | பூதவாகனம் | ,, |
| 26. | ,, | பல்லக்கு | அம்பாளுக்கு |

இவற்றுள் முதலாவதாக உள்ள தங்கப்பல்லக்கு நீங்கலாக மற்ற வாகனங்களைப் பார்ப்பதற்கு ரூபாய் மூன்று (ரூ. 3/-) கட்டணமாகச் செலுத்தவேண்டும்.

## பிற்சேர்க்கை II

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பாடிய தேவாரப் பதிகம்

### பண் - காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

1. அலைவளர் தண்மதியோட யலேயடக்கியுமை
முலைவளர் பாகமுயங்க வல்ல முதல்வன்முனி
யிலைவளர் தாழைகள் விம்முகானலிராமேச்சுரந்
தலைவளர் கோலநன் மாலையன்றுனிருந்த காட்சியே.

2. தேவியை வவ்விய தென்னிலங்கைத்தச மாமுகன்
பூவியலும்முடி பொன்றுவித்த பழிபோயற
வேவியலுஞ்சிலை யண்ணல்செய்த விராமேச்சுரம்
மேவிய சிந்தையினார்கடம்மேல் வினை வீடுமே.

3. மானன நோக்கி வைதேகி தன்னையொரு மாயையாற்
கானதில் வவ்விய காரரக்கன்னுயிர் செற்றவ
னீனமில்லாப் புகழண்ணல் செய்தவிராமேச்சுர
ஞானமும் பொருளாகி நின்றதொரு நன்மையே.

4. உரையுணராதவன் காமமென்னு முறுவேட்கையான்
வரைபொரு தோளிறச் செற்றவில்லி மகிழ்ந்தேத்திய
விரைமருவுங் கடலோதமல்கு மிராமேச்சுரத்
தரையர வாட நின்றுடல் பேணுமம்மா னல்லனே.

5. ஊறுடை வெண்டலை கையிலேந்திப் பலவூர் தொறும்
வீறுடைய மங்கையரை யம்பெய்ய விறலார்ந்ததோ
ரேறுடை வெல்கொடி யெந்தைமேய விராமேச்சுரம்
பேறுடையான் பெயரேத்துமாந்தர் பிணிபேருமே.

6. அணையிலைசூழ் கடலன்றடைத்துவழி செய்தவன்
பணையிலங்கும் முடிபத்திறுத்த பழிபோக்கிய
வினையிலியென்று மிருந்த கோயிலிராமேச்சுரந்
துணையிலிதூ மலர்ப்பாதமேத்தத்துயர் நீங்குமே.

7. சனி புதன் ஞாயிறு வெள்ளி திங்கள் பலதீயன
முனிவது செய்துகந்தானை வென்றவ் வினைமுடிட
இனியருணல்கிடென் றண்ணல்செய்த விராமேச்சுரம்
பனிமதிசூடி நின்ருட வல்லபரமேட்டியே.

8-9. பெருவரை யன்றெடுத்தேந்தினுன்றன் பெயர்சாய்கெட
வருவரையா லடர்த்தன்று நல்கியயன்மாலெனு
மிருவருநாடி நின்றேத்து கோயிலிராமேச்சுரத்
தொருவனுமே பலவாகி நின்றதொரு வண்ணமே.

10. சாக்கியர்வன்சமண்கையர் மெய்யிற்றடு மாற்றத்தார்
வாக்கியலு முறைபற்று விட்டுமதியொண்மையா
லேக்கியலுஞ்சிலையண்ணல் செய்த விராமேச்சுர
மாக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னருளாகவே.

11. பகலவன் மீதியங்காமைக்காத்த பதியோன்றனை
யிகலழி வித்தவனேத்து கோயிலிராமேச்சுரம்
புகலியுண்ஞான சம்பந்தன் சொன்ன தமிழ்புந்தியா
லகலிடமெங்கு நின்றேத்தவல்லார்க் கில்லையல்லலே.

திருச்சிற்றம்பலம்.

## பண் - பழம்பஞ்சுரம்

1. திரிதரு மாமணி நாகம்ஆடத் திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக்க எரியேந்தி யாடும் நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்தம் இலங்குகானல் இராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி விமலர் செயுஞ்சேயலே.

2. பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரும் இராமேச்சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம் மணாளர் செயுஞ்செயலே.

3. அலைவளர் தண்புனல் வார்சடைமேல் அடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடஆடி மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியும் இராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந் தலைவர் செயுஞ்செயலே.

4. மாதன நேரிழை யேர்தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரி அங்கையில் ஏந்தியாடுந் திறமே தெரிந்துணர்வார்
ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்தும் இராமேச் சுரமேயார்
போதுவெண் டிங்கள்பைங் கொன்றைசூடும் புனிதர்
[செயுஞ்செயலே

5. சூலமோ டொண்மழு நின்றிலங்கச் சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடஆடுங் குணமே குறித்துணர்வார்
ஏல நறும்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
நீலமார் கண்ட முடையவெங்கள் நிமலர் செயுஞ்செயலே.

6. கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக் காமனைக்
[காய்ந்தவர்தாம்
இணைபிணை நோக்கிநல் லாளொடாடும் இயல்பின ராகிநல்ல
இணைமலர் மேலன்னம் வைகுகானல் இராமேச் சுரமேயார்
அணைபிணை புல்கு கரந்தைசூடும் அடிகள் செயுஞ்செயலே.

7. நீரினார் புன்சடை பின்புதாழ நெடுவெண் மதிசூடி
ஊரினார் துஞ்சிருள் பாடியாடும் உவகை தெரிந்துணர்வார்
ஏரினார் பைம்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
காரினார் கொன்றைவெண் டிங்கள்சூடுங் கடவுள்
[செயுஞ்செயலே.

8. பொன்றிகழ் சுண்ணவெண் ணீறுபூசிப் புலித்தோ லுடையாக
மின்றிகழ் சோதியர் பாடலாடல் மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்தும் இராமேச் சுரமேயார்
குன்றினா லன்றரக் கன்தடந்தோள் அடர்த்தார்
[கொளுங்கொள்கையே.



கீழக் கோபுரமும் அம்மன் சந்நிதியும்

9. கோவலன் நான்முகன் நோக்கொணுத குழகன் அழகாய
மேவலன் ஒள்ளெரி யேந்தி யாடும் இமையோர்
[இறைமெய்ம்மை
ஏவல னூர்புகழ்ந் தேத்திவாழ்த்தும் இராமேச் சுரமேய
சேவல வெல்கொடி யேந்துகொள்கை யெம்மிறைவர்
[செயுஞ்செயலே.

10. பின்னெடு முன்னிடு தட்டைச்சாத்தி பிரட்டே திரிவாரும்
பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள் புறங்கூறல்
[கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலும் இராமேச் சுரமேய
பன்னெடு வெண்டலை கொண்டுழலும் பரமர் செயுஞ்செயலே.

11. தேவியை வவ்விய தென்னிலங்கை யரையன் திறல்வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணும் இராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம்பந்தன்நல்ல மொழியால் நவின்றேத்தும்
பாவியன் மாலைவல்லா ரவர்தம்மினை யாயின பற்றறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

பிற்சேர்க்கை III

## திருநாவுக்கரசு நாயனுர் பாடிய தேவாரப் பதிகம்

### பண் - திருநேரிசை

திருச்சிற்றம்பலம்.

1. பாசமுங்கழிக்க கில்லாவரக் கரைப்படுத்துத் தக்க
வாசமிக்கலர்கள் கொண்டு மதியினுன் மால்செய்கோயில்
நேசமிக் கன்பினுலே நினைமினீர் நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்த திருவிராமேச்சுரமே.

2. முற்றினநாள்களென்று முடிப்பதே காரணமா
யுற்றவன் போர்களாலே வுணர்விலாவரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயிற்றிருவி ராமேச்சுரத்தைப்
பற்றிநீ பரவுநெஞ்சே படர்சடை ஈசன்பாலே.

3. கடலிடை மலைகடம்மா லடைத்துமால் கருமமுற்றித்
திடலிடைச் செய்த கோயிற்றிருவி ராமேச்சுரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற்சுழல்கின்றேன் தூய்மையின்றி
யுடலிடை நின்றும் பேராவை வராட்டுண்டுநானே.

4. குன்றுபோற்றேளுடைய குணமிலா வரக்கர்தம்மைக்
கொன்று போராழியம்மால் வேட்கையாற் செய்தகோயில்
நன்றுபோல்நெஞ்சமே நீ நன்மையையறிதியாயிற்
சென்றுநீ தொழுதுய் கண்டாய் திருவிராமேச்சுரமே.

5. வீரமிக்கெயிறு காட்டிவிண்ணுற நீண்டரக்கன்
கூரமிக்கவனைச் சென்று கொன்றுடன் கடற்படுத்துத்
தீரமிக்கானிருந்த திருவிராமேச்சுரத்தைக்
கோரமிக்கார்தவத்தாற் கூடுவார் குறிப்புளாரே.

6. ஆர்வலம் நம்மின்மிக்காரென்ற அவ்வரக்கர் கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப் பொருதவர் தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால் செய்திருவிராமேச்சுரத்தைச்
சேர்மடநெஞ்சமே நீ செஞ்சடையெந்தைபாலே.

7. வாக்கினலின்புரைத்துவாழ்கிலார் தம்மையெல்லாம்
போக்கினற் புடைத்தவர்க ளுயிர்தனை யுண்டுமால்தான்
தேக்குநீர் செய்தகோயிற் றிருவிராமேச் சுரத்தை
நோக்கினல் வணங்குவார்க்கு நோய்வினை நுணுகுமன்றே.

8. பலவுநாடமை செய்து பார்தன் மேற்குழுமி வந்து
கொலை விலார் கொடியராயவரக்கரைக் கொன்றுவீழ்த்த
சிலையினன் செய்தகோயிற் றிருவிராமேச் சுரத்தைத்
தலையினல் வணங்குவார் கடாழ்வராந்தவம தாமே.

9. கோடி மாதவங்கள் செய்து குன்றினர் தம்மை எல்லாம்
வீடவே சக்கரத்தா லெறிந்துபின் னன்புகொண்டு
தேடிமால் செய்தகோயிற் றிருவிராமேச் சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமே நீ நன்னெறியாகுமன்றே.

10. வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை யொன்றறியார்
புன்கண்ணராகி நின்றுபோர்கள் செய்தாரை மாட்டி
செங்கண்மால் செய்தகோயிற் றிருவிராமேச் சுரத்தைத்
தங்கணுலெய்த வல்லார் தாழ்வராந்தலைவன் பாலே.

11. வரைகளொத் தேயுயர்ந்த மணிமுடியரக் கர்கோனை
விரையமுற் றறவொடுக்கி மீண்டுமால் செய்தகோயிற்
றிரைகள் முத்தால் வணங்குந்திருவிராமேச் சுரத்தை
யுரைகள் பத்தாலுரைப்பா ருள்குவாரன்பி னுலே.

திருச்சிற்றம்பலம்.

---

## பிற்சேர்க்கை IV

# கம்பராமாயணம்

## யுத்தகாண்டம்—மீட்சிப்படலம்

### சேதுவின் சிறப்பு

1. நன்னுத னின்னை நீங்கி நாள்பல கழிந்த பின்றை
மன்னவ னிரவி மைந்தன் வான்றுணை யாக நட்ட
பின்னைமா ருதிவந் துன்னைப் பேதறுத் துனது பெற்றி
சொன்னபின் வான ரேசர் தொகுத்ததிச் சேது கண்டாய்.

2. மற்றிதன் றூய்மை யெண்ணின் மலரயன் றனக்கு மெட்டா
பொற்றொடித் தெரிவை யானென் புகலுகேன் கேட்டி யன்பாற்
பெற்றதாய் தந்தை யொடு தேசிகற் பிழைத்துச் சூழ்ந்த
சுற்றமுங் கெடுத்து ளோரு மெதிர்தரிற் சுரர்க ளாவார்.

3. இந்திரற் கஞ்சி மேனு ளிருங்கடல் புக்கு நீங்காக்
கந்தர சயிலந் தன்னைக் கண்டவர் வினைக டீர்க்குங்
கந்தமா தனமென் றேதுங் கிரியிவண் கிடப்ப கண்டாய்
பைந்தொடி யடைந்த சேது பாவன மாய தென்றான்.

4. கங்கையோ டியமுனை கோதா விரியொடு நருமதை காவேரி
பொங்குநீர் நதிகள் யாவும் படிந்தலாற் புன்மை போகா
சங்கெறி தரங்க வேலை தட்டவிச் சேதுவென்னும்
இங்கிதி னெதிர்ந்தோர் புன்மை யாவையு நீக்கு மன்றே.

5. ஆவினைக் குரவ ரோடு மருமறை முனிவர் தம்மைப்
பாவையர் குழுவை யின்சொற் பாலரைப் பயந்து தம்மின்
மேவின வவரைச் செற்றோர் விரிகடற் சேது வந்து
தோய்வரே லவர்கள் கண்டாய் சுரர்தொழுஞ் சுரர்க ளாவார்.

6. மரக்கல மியங்க வேண்டி வரிசிலைக் குதையாற் கீறித்
தருக்கிய விடத்துப் பஞ்ச பாதக ரேனுஞ் சாரிற்
பெருக்கிய வேழு மூன்று பிறவியும் பிணிக ணீங்கி
நெருக்கிய வமரர்க் கெல்லா நீணிதி யாவ ரன்றே.

7. நெற்றியி னழலுஞ் செங்க ணீறணி கட்வு ணீடு
கற்றையஞ் சடையின் மேவு கங்கையுஞ் சேது வாகப்
பெற்றில மென்று கொண்டு பெருந்தவம் புரிகின் றுளால்
மற்றிதன் தூய்மையெவ்வா றுரைப்பது மலர்க்கண் வந்தாய்.

## கம்பராமாயணம்

## யுத்தகாண்டம்—பூசைப்படலம்

1. வேந்தர் வேந்தனும் வேலையின் கரையினில் வரவே
வாய்ந்த சாய்கையும் வந்தது வானவர் வணங்க
ஏந்து தோள்புயத் திராமனு மிலக்குவன் றானும்
வாய்ந்த சீதையு மானமும் வானர வேந்தும்.

2. நின்ற போதினில் நிகரிலா வகத்தியன் முதலோர்
குன்று போற்புயத் திராகவன் றனைவந்து குறுக
நன்று நின்வர வென்னவே நாதனும் வணங்கி
வென்றி வேந்தனும் வேதியர் தம்மொடு வியந்து.

3. சேது வின்கரை சேர்ந்தவத் திறல்புனை யிராமன்
ஏது வித்தல மென்குறு முனிவனைக் கேட்ப
வாத ராசனும் வாசுகி தானுமுன் மலைந்த
போது தந்ததிப் பொன்னக ரென்றவன் புகன்றான்.

4. புகன்ற வன்றனைப் பூங்கழ லிராகவன் சாய்கை
அகன்ற காரணங் குறுமுனி யுரைசெய வவனும்
பகர்ந்த தேவரும் பாற்கடற் பள்ளியான் பரமன்
புகுந்த திவ்வழிப் பூவில்வந் தவனுமற் றியாரும்.

5. இருப்ப தித்தல மாகையா லிராவணன் சாய்கை
அருத்தி யின்றியே யகன்றதென் றருள்முனி யரையப்
பெருத்த தோளுடை யண்ணலும் பிரியம்வந் தெய்திக்
கருத்து மற்றினியுரையெனக் குறுமுனி கழறும்.

6. இந்த மாநகர் தன்னிலே யிறைவனை யருச்சித்து
உந்தன் மாநக ரெய்தினுற் சாய்கைபோ முரவோய்
அந்த நீதியே செய்துமென் றனுமனை யழைத்திட்டு
எந்தனுதனை யிமைப்பினிற் கொடுவர வென்ருன்.

7. அந்த வேலை முனிவ னளிதெருள்
இந்த மாநிலத் தியாவரு மின்புறக்
கந்த மேவிய கங்கையி லோர்சிலை
தந்து காணென மாருதி தாவினுன்.

8. போதி யென்றவற் போக்கிய விராமனு மிந்த
மாது சீதையு மைந்தனு மிலக்குவன் ருனும்
தீது தீரவே தீர்த்தங்கள் யாவையு மாடி
ஆதி நாதனு மிருந்தன னமரர்கள் வியப்ப.

9. ஆன போதினி லையன் மனத்துளே
தானி னைந்தது தானு ரறிகுவார்
ஞான மோர்வடி வாகிய நாரணன்
மோன மாகி யிருந்தன(ன்) மூவரான்.

10t காலஞ் சென்ற தெனக்கரு திக்கையால்
கோல மான மணலினைக் கூட்டியே
ஆல முண்ட தேவிவ ராமென
ஞால முண்டவர் தம்மன நாட்டவே.

11. முகுத்த மானதென முனிவனு மொழிதலு மிராமன்
மிகுத்த தோரிடத் தெய்தியே வெண்மணல் கூப்பி
அகத்தி னிற்புறம் பூசித்தே யடிமல ரிறைஞ்சிச்
செகுத்த தோளுடைத் தம்பியுஞ் சீதையுந் தானும்.

12. ஒத்த பூசனை செய்யவு மமைதியி னுள்ள
சித்தி மேவிய ஞானமுந் தொடர்விடா திருந்தோன்
அத்தன் பாதக மானவை யழிதர வியற்றிச்
சித்தம் வாழ்தர நின்றனன் றேவர் கடுதிப்ப.

13. நின்ற போதினி னிறங்களும் படலமுங் கொண்டு
வென்றி சேர்புய மாருதி விரைவினில் வந்து
நன்று செய்தனை யெனப் போய் நாதனைப் பிடுங்கி
வென்றி வாலற்று மேதினி வீழ்ந்தனன் வீரன்.

14. விழுந்த வன்றனை வெந்திற லிராகவ னோக்கி
அழுந்து சிந்தையா யறிவிலா ததனையென் செய்தாய்
பொழிந்து மாமல ரிட்டுநீ யருச்சியென் றுரைப்ப
எழுந்து போயவ னிறைவனை யருச்சனை செய்தான்.

15. அவ்வி டத்தனு மான்றந்த கங்கைமேல்
வவ்வி டப்பரும் வந்திடு வான்சிலை
அவ்வி டத்தினி லியாவரு மேத்தெனுத்
தெவ்வ டக்குஞ் சிலையவன் செப்பினன்.

16. எந்த னுத னிவனென் றிறைமகன்
தந்த நாவஞ் சராசரஞ் சார்ந்தபோது
இந்தி ரன்பிர மாமுத லெய்தினர்
வந்து வானவர் யாவரும் வாழ்த்தினர்.

17. இத்த லத்தினில் யாருமங் கோர்சிலை
வைத்து மாமனத் துள்ளே வழுத்துவார்
நத்து லாயகை நாரண னுன்முகன்
பித்தன் மூவரு மேத்தப் பெறுகென.

18. என்றி ரான? வரசன் பெருமையின்
நன்றி தன்னை நவில வடங்குமோ
சென்று சென்று செயசெய போற்றியென்று
அன்றி ராச குமார னறைகுவான்.

19. பூச னைத்தொழில் முடிந்தபின் பூங்கழ லிராமன்
தேவத் தச்சனை யழைத்துநீ திரைகடற் கிடந்த
காவல் மாமலை கொணர்ந்துநீ கண்ணுதற் கோயில்
பூவில் வந்தவன் சொல்வழிச் சமையெனப் புகன்றான்.

20. நந்தி யம்பதி யிறைவனை நாதனு மழைத்தே
இந்த மாமலை யிருமென யாவையு நல்கி
விந்தை தங்கிய தோளினீர் வேந்தனைப் பூசித்து
இந்த மாநக ரிருமென விராமனு மகன்றான்.

21. தேரேறி மானுகஞ் சென்னிமிசை சென்றேறக்
காரேறு கண்ணபிரான் காவலவன் கமழ்துளபத்
தாரேறு தடந்தோளான் தனிவயிரக் குனிசிலைக்கைப்
போரேறு பொலிவுடனே வடதிசையிற் போயினனால்.

[வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர் யுத்தகாண்டம்—உரை 1948-ஆண்டுப் பதிப்பு.]

---

## பிற்சேர்க்கை V

## தாயுமான சுவாமிகள் பாடியது

(மலைவளர் காதலி)

### பர்வதவர்த்தினி அம்மன் பதிகம்.

1. பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுன் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்தமாக யம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித்திகளுமுண்டு

கறையுண்ட கண்டர்பா லம்மை நின்ருளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தையுண்டபர
ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப் பெணுமையே.

2. தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலே மேல்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியார் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலேயு னிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர் காதலிப்பெ ணுமையே.

3. பூதமுத லாகவே நாதபரியந்தமும்
பொய்யென் றெனைக்காட்டி யென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போதபூரண வெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துனினை
வெல்லாஞ்செய் வல்லசித்தாம்



மூன்றும் பிரகாரம் தூண் வரிசை

இன்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
எளியேன் மறந்துய்வனே
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலுவாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந் துக்கமிர்தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப் பெணுமையே.

4. மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனும்
துடியிட்ட வெவ்வினையை யேவினுன் பாவிநான்
தொடரிட்ட தொழில்க ளெல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வதென்றோ
அடியிட்ட செந்தமிழி னருமையிட்டாரூரி
லரிவையோர் பரவை வாயில்
அம்மட்டு மடியிட்டு நடைநடந்தருளடிக
ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர் காதலிப்பெ ணுமையே.

5. பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழில்
புங்கவி விளங்கு சிவசங்கரி சஹஸ்தள
புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணிமனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்

நாமமே யுச்சரித்திடுமடியர் நாமமே
நானுச் சரிக்கவசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே பின்னையுங்கன்னியென மறைபேசு
மானந்த ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர் காதலிப்பெ ணுமையே.

6. பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
பரிபாகம் வரவு மனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியென் பாபரூபம்
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரவென் ளூற்கள்ளமனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென் செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
முற்றுமாற்சரியமோதான்
முறியிட்டெனைக் கொள்ளுநிதியமோ தேடவெனின்
மூசுவரி வண்டு போல
மாகமோ டவும் வல்லனெனையாள வல்லையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப்பெ ணுமையே.

7. தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளும்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவை யெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற வுள்ளுடைந்து

நயனங்க ளற்றதோ ரூரேறு போலவே
நானி லந்தனி லலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்த மயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

8. பூதமொடு பழகி வளரிந்திரிய மாம்பேய்கள்
புந்தி முதலான பேய்கள்
போராடு கோபாதி ராட்சசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தா னிவல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந்த்ராதிக்ய
வித்தையை வியந்தருள் வையோ
நாதவடி வாகிய மஹாமந்திர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர் காதலிப்பெ ணுமையே.

## பிற்சேர்க்கை VI

# அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்

1. வாலவயதாகியழ காகிமத ஞகிபணி வாணிபமொடாடிமரு
ளாடிவிளையாடிவிழல் வாழ்வுசதமாகிவலி வாகிமட கூடமொடு
பொருள்தேடி

2. வாசபுழுகோடுமல ரோடுமணமாகி மகிழ் வாசனைகளாதியிட
லாகிமயலாகிவிலை மாதர்களைமேவியவ ராசைதனிலேசுழல
சில நாள்போய்த்

3. தோல்திரைகளாகிநரை யாகிகுருடாகியிரு கால்கள்தடுமா
றிசெவிமாறிபசுபாசபதி சூழ்நதிகள் மாறிசுக மாறிதடியோடு
திரி யுறுநாளில்

4. சூலைசொறியீளைவலி வாதமொடு நீரிழிவுசோகை களமாலைசுர
மோடுபிணிதூ றிருமல் சூழலுற மூலகசு மாலமென நாறியுட
லழிவேனோ

5. நாலுமுகனுதியரி யோமென வதாரமுரை யாதபிரமாவைவிழ
மோதிபொருளோதுகென நாலுசிரமொடுசிகை தூளிபட
தாளமிடு மிளையோனே

6. நாறிதழிவேணிசிவ ரூபகலியாணிமுத லீணமகவாணைமகிழ்
தோழவனமீது செறிஞான குறமாதைதினைகாவில்
மணமேவுபுகழ் மயில்வீரா

7. ஓலமிடுதாடகை சுவாகுவனரேழுமரம் வாலியொடு நீலிபக
ஞேடொருவிராதனெழு மோதகடலோடுவிறல்
ராவணகுழாமமரில் பொடியாக

8. ஓகைதழல் வாளிவிடு மூரிதனுநேமிவளை பாணிதிருமார்பனரி
மருகாவெனவே யோதமறைராமெசுரமேவு குமராவமரர்
பெருமாளே.

வானோர் வழுத்துனது பாதார பத்மமலர்
மீதே பணிக்கும் வகை யறியாதே
மானார் வலைக்கணதி லேதூளி மெத்தையினி
லூடே யணைத்துதவு மதனாலே
தேனே கருப்பிலெழு பாகோ விதற்கிணைக
ளேதோ வெனக்கலவி பலகோடி
தீரா மயக்கினெடு நாகா படத்திலெழு
சேருடல் பெற்றதுய ரொழியேனோ
மேனாடு பெற்றுவளர் சூராதி பற்கெதிரி
னூடேகி நிற்குமிரு கழலோனே
மேகார வுக்ரபரி தானேறி வெற்றிபுனை
வீரா குறச்சிறுமி மணவாளா
ஞானா பரற்கினிய வேதாக மப்பொருளை
நாணாதுரைக்குமொரு பெரியோனே
நாராயணற்குமரு காவீறு பெற்றிலகு
ராமேசுரத்திலுறை பெருமாளே.

---

பிற்சேர்க்கை VII

## சேதுப்புராணம்

### இராமநாத சுவாமி

பூந்தவிசி னிருந்தபிரான் முதலோர் காணப்
புண்டரிக மகள் கொழுநன் புகழிலங்கை
வேந்தனுயிர்ப் பழிகழுவு முகத்தால் யார்க்கும்
விடையவனே யுடையவனும் வேதவாய்மை
யாந்தரங்கம் வெளிசெய்வா னனைவரோடு
மணைந்துகந்த மர்தனத்தி லருச்சித்தேத்து
மேந்துபுனற் சடிலமுடி யிராமநாத
னிணையடிச்செந் தாமரைக ளிறைஞ்சி வாழ்வாம்.

### பர்வதவர்த்தினியம்மன்

தண்ணெனவும் வெச்செனவுந் தந்துசாயத்
  தகைபயின்று விடநீக்கித் தலைவற்கென்று
முண்ணமுதந் தனையுதவி யிமையமேரு
  வுயர்சிகர மந்தரத்தை யொருவிச் சேர்ந்துங்
கண்ணுதலை விளர்ப்புறலாற் கயிலையெள்ளிக்
  கௌணியர்க்குத் தமிழ்சுரக்குங் காட்சியாலே
வண்ணமுலை மலயமலை மானுங்கன்னி
  மலைவளர்கா தலிமலர்த்தாள் மனத்துள் வைப்பாம்.

---

## பிற்சேர்க்கை VIII

## மு. ரா. அருணுசலக் கவிராயர் இயற்றிய தோத்திரப் பாடல்கள்

### உப்பூர் விநாயகர்

அப்பூருஞ் செஞ்சடையாரளித்த பிரணவப்பொருளை
  யடியார்க்கெல்லாம்
வெப்பூரும் பிறவிநோய் மாற்றுமோரருமருந்தை
  வியாசர் வாக்காற்
செப்பூரும் பாரதத்தை மேருவிற்றீட்டிய தேவைச்
  சேது செய்ய
வுப்பூரிலிராகவன் பூசித்தகணபதியையன்பி
  னுளங் கொள்வோமே. (1)

### மேலைக்கோபுரவாயில் முருகக்கடவுள்

வேலைக்கோ கனகமலர்த்திருக்கரங் கொண்டசுரர்கிளை
  வேரறுத்துப்
பாலைக்கோகிலத்தை நிகர்பனிமொழிவள்ளியை மணந்து
  பரவுஞ்சேது

மேலைக்கோபுரவாயிலமர்ந்தவனை வணங்குவார்
வெய்யகால
னேலைக்கோர் பயமுமின்றி யுயர்ந்தசிவபதத்திலென்று
முறுவர்மாதோ. (2)

வெயிலேறு மணிப்புயங்களோராறுங்கருணைபொழி
விழியீராறும்
அயிலேறு கரதலமு மபயவரதாம்புயமு
மமையப்பெற்றுக்
குயிலேறும் பொழிற்சேதுமேலைக்கோபுரவாயில்
குடியாக்கொண்ட
மயிலேறுங் குமரகுருபரனிருசெந்தாமரைத்தாள்
வணக்கஞ்செய்வோம். (3)

## இராமநாதர்

கங்கைநீ ரேற்றுடலம் குளிர்பொறுக்க முடியாத
கருத்தீதென்ன
அங்கையா லுரித்த புலித்தோலு மியானைத்தோலு
மமையப்போர்த்து
மங்கையா மலைவளர் காதலிகாண ஙளனென்பான்
வரைகள் வாங்கிச்
செங்கையாற் செயிராம சேதுவில்வாழ் சிவபிரான்
றிருத்தாள் போற்றி. (4)

சடையமு தந்துளிக்கு மதிபுனைந்துந் திருமேனித்
தழலின்வெம்மை
யுடையவுநீங் காமையினுற் கடற்குளிர் காற்றவாவி வந்தாங்
கமர்தல் போலக்
கொடையிலுய ரிராமசே துக்கரைவாய்த் திருக்கோயில்
கொண்டுவைகி
விடையிலெழுந் தருட்காட்சி கொடுத்தருளெம் முடையானை
விரும்பிவாழ்வோம். (5)

பொன்பூத்த செழுங்கொன்றைமாலையோடு வெள்ளெருக்கம்
பூவுந்தாங்கு
மின்பூத்த சடைமுடியெம் பெருமானம் மூவர்தமிழ்
மெய்ப்பாவோடு
தென்பூத்த சேதுராமேச் சுரத்திற் பிறவடியார்
செப்பும்பாவுந்
தன்பூத்த கருணையினாலேற் றருளுமென நினைந்தஞ்
சலி செய்வோமே. (6)

அருவிலொரு நான்கு மாயுருவிலொரு நான்குமா
யமைந்ததன்றி
யுருவருவி லொன்றென்னுஞ் சதாசிவமா மிலிங்கவுரு
வுற்றுப் பின்னர்த்
திருவிரா மேசரெனச் சிறப்புப்பே ரொன்றெய்திச்
சேதுதன்னிற்
பருவதவர்த்தனி மணந்த நாயகனும் பரம்பரனைப்
பணிதல் செய்வாம். (7)

பந்தமான துதொலையப் பழவடியார் பணிந்தெழுந்து
பலங்கைக் கொள்ளுங்
கந்தமா தனமலையின் கற்பகத்தைக் கருணைமதங்
கவிழ்க்கு மொற்றைத்
தந்தமா முகன் றனைமுன்றந்த மாமுகமைந்து
தாங்குந் தேவை
யெந்தமா பாவமும் போக் கிராமநாதரைநெஞ்சு
ளிறைஞ்சி வாழ்வாம். (8)

## சேதுமாதவர்

குழையுமலர்ப் பொழிராமேசுரத் திற்ற னடியார்
தனக்குச்செய்த
பிழையனைத்தும் பொறுத்தருளித் தான்செய்த சேதுவினைப்
பேணிக்காக்க



மதுரை மன்னன் விசுவநாத நாயக்கர்

விழையுநிணப் பொடுசேது மாதவப்பேர் கொண்டென்றும்
வீற்றிருந்த
மழைநிறத்துத் திருமேனிப் பெருமானைக்கைகுவித்து
வணங்கிவாழ்வாம். (9)

## அனுமார்

கவியிலுயர் கம்பன்போ லெழுபது வெள்ளங்கொண்ட
கவிகட்கெல்லாம்
புவியிலுயர்வுற்றிராகவன் றூதாயிலங்கையிற்போய்ப்
பொருதுமீண்டு
குவிகையொடு காசியிற் சென்றிறைஞ்சிசிவலிங்கங்
கொணர்ந்துதாபித்
தவிரிரா மேச்சுரத்திலமரனும கவியிருசீ
ரடிகள் போற்றி. (10)

திருச்சிற்றம்பலம்.

---

பிற்சேர்க்கை IX

## தேவையுலா—தீர்த்தங்கள்

1. கால வரையடைந்துங் கால வரையடையாச்
சீல முடையசக்ர தீர்த்தமும்—கோலவரைப்
2. பேதையொரு பாகன்போற் பேயுட னேயாடும்
வேதாள தீர்த்தமெனு மென்புனலும்—பூதலத்து
3. வாவுந் திடமதிக்கு வந்த மறுத்துடைத்த
பாவ விநாசப் பசுந்தடமும்—ஆவலாற்
4. சீதைதரும் பட்டத்தாற் றேவேந் திரப்பட்டங்
கோதகன்ற தாஞ்சீதா குண்டமும்—நீதிபோய்த்
5 தேயமிழந் தோனிழந்த தேர்பரியெ லாங்கவந்த
வாயி லுதிப்பித்த மங்கலமும்—நேயத்தால்

6. ஏந்திய நல்லோரை யேகாந்த ராமன்பாற்
சேர்த்து விடுமமுத தீர்த்தமும்—பூத்தமலர்

7. வீட்டிலுறை வேதாவை மிக்கமக வானுகக்
கூட்டி யருள்பிரம குண்டமும்—வாட்டமுறு

8. நொய்யமனத் தன்மசக னூறுமக வானுகச்
செய்யு மனுமகுண்ட தீர்த்தமும்—ஐயமற

9. மானத வாவிவடி வாய்த்தெய்வ யானைதனை
யீனு மகத்தியனு ரேல்வையும்—மேனுளில்

10. மெய்கழுவ வந்த விசயன் றமையனுக்குப்
பொய்கழுவி ராமர்திருப் பொய்கையும்—தெய்வதங்கள்

11. வாழுமொருதேவை வந்து பலதேவர்
தாழு மிலக்குமணர் தண்புணலும்—சூழுலகிற்

12. காந்தவருங் கூட்டைக் கழுவச் சுகழுக்குத்
தீர்ந்து விடுசடா தீர்த்தமுஞ்—சாந்தமலர்

13. கூற்றன் மகனைக் குபேரன் மகனுகத்
தேற்று மிலக்குமி தீர்த்தமும்—நாற்றிசையும்

14. போய்முளைக்குஞ் சீதைபழி போக்குதற்காகத் தண்ணீரிற்
றீமுளைக்கு மக்கினி தீர்த்தமும்—பூமியிலே

15. தங்குமறை யான்ருளுந் தந்துவிசும் பின்மறையான்
செங்கையு நல்குசக்ர தீர்த்தமும்—பங்கயத்தோன்

16. மாலை முடியறுக்க வந்த பிரமகத்திக்
காலை யறுத்தசிவ கங்கையும்—வேலையெனப்

17. பொங்குநீர்க் குள்ளே புழுங்கிஞேன் வெம்மையொரு
சங்கநீர் தீர்த்தசங்க தீர்த்தமும்—பங்கொருவன்

18. ஒப்பரிய வையத்தி லோடிவந்து முந்நீரைச்
செப்பமுற நீந்தியமுத் தீர்த்தமும்—இப்புவியின்

19. மாமிக்காய் மாமன்போய் மாமனைக் கொன்றபழி
சேமித் திடாக்கோடி தீர்த்தமும்—காமத்தால்

20. ஓசைநீர் தோய்ந்தோற் குருப்பசியின் வேதனைகள்
மோசனமாஞ் சாத்யா முதநீரும்—பேசொருவன்

21. வெண்மை யீரைக்கழுவ மிக்க கருமயிராந்
திண்மை பெறுஞ்சருவ தீர்த்தமும்—வண்மையினுற்

22. ருனே யரியையுஞ் சம்புவையும் விண்ணவர்தங்
கோனுகச் செய்ததனுக் கோடியும்—மாநிலத்தின்

23. மேலான கத்துருவின் வீழ்சலதோ டந்தணிக்கப்
பாலாவி யாகியபா லோடையும்—மேலான

24. நாணுருவா மம்புருவ நங்கை சிலையுருவின்
கோண லொழித்தகவி குண்டமும்—காண

25. அரிதலை தன்னை யயனுடலிற் சேர்க்குஞ்
சரசுவதி காயத்ரி தாமும்.

---

## பிற்சேர்க்கை X

## வடமொழி நூற் குறிப்புக்கள்

### வேதங்கள் (சுருதி)

**(1)** ருக்வேதம்: (X மண்டலம், சூக்தம் 3, சுலோகம் 3).

இராமன் சீதையுடன் காட்டுக்குச் சென்றுன். இராவணன் சீதையை அண்மினுன். கடலுக்கு அணைகட்டிச் சென்று, இராவணனைக்கொன்று, சீதையை நெருப்பில் மூழ்கச்செய்து இராமன் அழைத்துக்கொண்டான். அவள் பேரொளியுடன் திகழ்ந்தாள். (இந்த ரிருக்கத்தின் ஆசிரியருக்கு இராமகாதை நன்கு தெரிந்திருந்ததென்று விளங்குகிறது.)

**(2)** தைத்ரீய சம்ஹிதை அல்லது கிருஷ்ணயஜுர்வேதம்:

(III காண்டம், பிரஸ்னம் 2, அனுவாகம் 2, சுலோகம் 1).

அழியாத, மிகப்பரந்த இரண்டு கடல்களும் ஒன்றோடொன்று தொடர்ந்து வருவது எப்படி யிருக்கிறதென்றுல்

கர்ப்பத்திலிருந்து வெளிவரக்கூடிய பிறவிகளின் கால்கள் எப்படி வருமோ அப்படியாகும். ஒன்று கண்ணுல் பார்க்கக்கூடும். மற்ருென்று பார்க்க முடியாதது. ஆனுல் ஒரு நீர் நிலையை அணையினுல் தாண்ட முடிவதுபோல நம்முடைய மனத்தினுல் அறிந்து கொள்ளவேண்டும்.

## இதிகாசங்கள்

**(3)** வால்மீகி இராமாயணம்: (யுத்த காண்டம்)

நளன் கடலுக்கு அணைபோடுவதாக ஒப்புக்கொண்டான். வானரங்கள், மலைகள், குன்றுகள், மரங்கள் இவைகளைக் கொண்டுவந்து போட்டன. 100 யோசனை நீளமும், 10 யோசனை அகலமுமுள்ள பாலத்தைக் கட்டி இலங்கைக் கரைவரைக் கொண்டுபோய் ஐந்து நாட்களில் முடித்தன.

•

"அழகான முகமுடையவளே! இந்த கடல் துறையைப்பார். உன் நிமித்தமாக நளனைக்கொண்டு நான் கட்டுவித்த சேதுவைக் காண்பாயாக. இது சேதுபந்தனம் என்னும் புகழ்பெற்றது. மூன்று உலகங்களாலும் பூசிக்கத்தக்கது. இது மிகவும் தூய்மையானது. சகல பாவங்களையும் போக்கவல்லது. இங்கு பிரபு மகாதேவர் முன்பு எனக்கு அருள்புரிந்தார். அரக்கர்கோன் விபீடணன் இங்கு என்னிடம் வந்து சேர்ந்தான்" என்று இராமன் சீதைக்கு புட்பவிமானத்திலேறி அயோத்திக்குச் செல்லுகையில் சொன்னுன்.

**(4)** அத்யாத்ம ராமாயணம் : (யுத்த காண்டம்)

சேதுவைக் கட்டத் தொடங்குமுன் இராமன் இராமேசுவரர் என்ற சிவபெருமானைப் பிரதிஷ்டைசெய்து வழிபட்டான். "சேதுவையும் இராமேசுவரரையும் வணங்கு

கிறவனும், கங்கை நீர்கொண்டு வந்து இராமநாதருக்கு அபிஷேகம் செய்கிறவனும் கடலில் பாவச்சுமையை எறிந்துவிட்டு வீடுபேற்றை யடைவான்'' என்று உலக நன்மைக்காக இராமன் கூறினன்.

(5) **ஆனந்த ராமாயணம்**: (சார காண்டம், யாத்ரா காண்டம்).

இராமன் நளனை அணையைக்கட்ட ஆணையிட்டான். கட்டத்தொடங்கும்போது விநாயகரையும், நவக்கிரகங்களையும் பிரதிஷ்டை செய்தான். தன் பெயரால் சிவலிங்கம் அமைக்க எண்ணி அனுமானைக் கொண்டுவரச் சொன்னன். அனுமான் வரக்காலம் தாழ்த்தப்படியாலும், நல்லவேளை நெருங்கிவிட்டதாலும் தானே மணலால் இலிங்கம் பிடித்துப் பிரதிஷ்டை செய்தான். அனுமான் கொண்டுவந்தஇலிங்கத்தை தான்அமைத்த இலிங்கத்திற்கு வடபுறம் நிறுவச்செய்து விசுவநாதர் என்ற பெயரிடச் சொன்னன். அனுமான் அப்படியே செய்தான். இராமலிங்கத்தை வழிபடுமுன் விசுவநாதரை வழிபடாதவர்கள் எவ்வித நன்மையும் அடையமாட்டார்கள் என்றும் இராமன் சொன்னன்.

அயோத்திற்குச் சென்று முடிசூட்டிக்கொண்ட பின் இராமன் மீண்டும் சேதுவுக்கு யாத்திரையாக வந்தான். உப்பூர் விநாயகரை வணங்கி, நவபாஷாணத்தில் மூழ்கி, வேதாள, பைரவ தீர்த்தங்களில் நீராடி, தன்னுடைய கோயிலான ஏகாந்தராமர் கோயிலை யடைந்தான். இலட்சுமண, இராம, அக்கினி, தனுஷ்கோடி தீர்த்தங்களில் நீராடி விசுவநாதர், இராமலிங்கர், இவர்களை வழிபட்டான். வில்லின் நுனியால் கோடி தீர்த்தத்தை உண்டாக்கினன். சேது (சுவேத) மாதவரை வணங்கி, ஒரு மாதம் தங்கியிருந்தான். கடைசியாகக் கோடி தீர்த்தத்தில் நீராடினன்.

## புராணங்கள்

**(6) ஆக்னேய புராணம்:** (புவனகோசவர்ணனை-க்ஷேத்திர மகாத்மியம்).

தர்ப்ப சயனத்தருகிலுள்ள சக்கரதீர்த்தத்தை யடைந்து இராமன் வில்லில் அம்பைப்பூட்டினான். கடல் அரசன் வந்து வணங்கி நளனைக்கொண்டு சேதுவைக் கட்டிக்கொள்ளும்படி வேண்டினான். கட்டப்பட்ட பின் அந்தப் பகுதியின் தலைவனைப் பார்த்து "சேதுவையும் ஈசுவரனையும் காவல்செய்து வருவாயாக" என்று இராமன் சொன்னான்.

**(7) பாகவத புராணம்:**

பலராமன் வெங்கடாத்திரியையும் தென்மதுரையை யும் வணங்கிவிட்டு, பாவங்களைப் போக்கும் சேதுவுக்குச் சென்றான்.

**(9) பத்ம புராணம்:** (சிருஷ்டி காண்டம்)

இராமனால் வானரங்களைக்கொண்டு சேது மூன்று நாட்களில் கட்டப்பட்டது. விபீடணன் வேண்டுகோளுக் கிணங்கி இராமன் வில்லினால் அணையை உடைத்தான். கடற்கரையில் இலட்சுமிநாயகனை வணங்கி, இராமேசு வரர் என்று பெயரிட்டு அபிஷேகம் செய்து வழிபட்டான். "இராமா! நான் இங்கு வசிக்கிறேன். உலகம் உள்ளளவும் சேதுவின் மகிமை நிலைபெற்றிருக்கும். இதைப் பார்த் தாலே எல்லா பாவங்களும் போய்விடும்" என்று அசரீரி வாக்கு எழுந்தது.

**(9) சிவ புராணம்:**

"சங்கரனே! திருவுளமிருந்தால் உலகத்தூய்மைக் காகவும், மக்கள் நன்மைக்காகவும் இங்கே தங்கவேண்டும்" என்று இராமன் கூறினான். "சிவன், இராமேசுவரர் என்ற பெயருடைய இலிங்கவுருவம் ஆனார். இராமன்

அவனுடைய அருள்பெற்று, கடல்கடந்து, அரக்கரை அழித்து, தன் அருமை மனைவியை மீட்டான். இராமேசுவரரின் பெருமை அதிசயமான தனிச்சிறப்புடையது. பக்தர்கள் வேண்டுவதை அளிக்கிறார். கங்கைநீரைக் கொண்டு வந்து தூய அன்புடன் இராமலிங்கரை நீராட்டுவிப்பவர் இகபரசுகங்களுடன் வீடுபேற்றையும் அடைவர். இப்படியாக இராமலிங்கரின் மகிமையை நான் உங்களுக்கெல்லாம் எடுத்துச் சொன்னேன்'' என்று சீதை சொன்னாள்.

**(10) கூர்ம புராணம்:**

இராமன் மகாதேவரின் இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். அவர் பார்வதி தேவியுடன் அவன் முன் தோன்றி, ''இரு பிறப்பாளர் இந்த இலிங்கத்தை வணங்கினால் பாவம் நீங்கப்பெறுவர், சேதுவுள்ளவரை யான் இங்கிருப்பேன். இங்கு முழுக்கு, தானம், தவம், பூசை முதலியன செய்வோர் அழியாப்பேரின்பம் அடைவர்'' என்று வரம் தந்தார்.

**(11) ஸ்காந்த புராணம்:** (சேது மகாத்மிய காண்டம்).

இராமேசுவரம் என்ற தலம் ஒன்று இருக்கிறது. இராம சேதுவைக் கண்டாலே சம்சார சாகரத்தினின்றும் விடுபடலாம். 'சேதுவுக்குப்போ' என்று சொல்பவருக்குக்கூட சகல நன்மைகளும் கிடைக்கும். இராமலிங்கேசுவரரையும், கந்தமாதன பர்வதத்தையும் நினைத்தால் பாவங்கள் நீங்கும். இராமன் பிரதிஷ்டை செய்த சிவலிங்கத்தைப் பார்த்தாலே வீடு பெறலாம். இராமலிங்கத்துள் சகல கடவுளர், முனிவர், தீர்த்தங்கள் எல்லாம் அடக்கம். இராமன் வழிபட்ட இலிங்கத்தை வணங்கினால் எமபயம் இல்லை.

**(12) மார்க்கண்டேய புராணம்:** (கல்பதரு பிரதிக்ரக பிராயச்சித்தம்).

உலக இன்பத்திற்காகப் பேராசை மேலிட்டு இந்த மரத்தின் உருவத்தைத் தானமாகப் பெறும் பிராமணன்

இராமேசுவரம் கோயிலிலுள்ள சந்நிதிகளும் தீர்த்தங்களும்




(விவரங்கள் பின்புறம்)

## தீர்த்தங்கள்

1 மகாலஷ்மி தீர்த்தம்
2 சாவித்திரி தீர்த்தம்
3 காயத்திரி தீர்த்தம்
4 சரசுவதி தீர்த்தம்
5 சேதுமாதவ தீர்த்தம்
6 கந்தமாதன தீர்த்தம்
7 கவாட்ச தீர்த்தம்
8 கவய தீர்த்தம்
9 நள தீர்த்தம்
10 நீல தீர்த்தம்
11 சங்கு தீர்த்தம்
12 சக்கர தீர்த்தம்
13 பிரமஹத்தி விமோசன தீர்த்தம்
14 சூரிய தீர்த்தம்
15 சந்திர தீர்த்தம்
16 கங்கா தீர்த்தம்
17 யமுனா தீர்த்தம்
18 கயா தீர்த்தம்
19 சிவ தீர்த்தம்
20 சத்தியாமிருத தீர்த்தம்
21 சர்வ தீர்த்தம்
22 கோடி தீர்த்தம்

## சந்நிதிகள்

A இராமநாதசுவாமி சந்நிதி
B விசுவநாதர் சந்நிதி
C விசாலாட்சி சந்நிதி
D உற்சவமூர்த்தி
E அம்பாள் சந்நிதி
F பள்ளிகொண்டபெருமாள் சந்நிதி
G சந்தானகணபதி சந்நிதி
H சுக்கிரவார சவுக்கை
I மகாகணபதி சந்நிதி
J முருகர் சந்நிதி
K கருவூலம்
L சேதுமாதவர் சந்நிதி
M இராமலிங்கப்பிரதிஷ்டை
N சபாபதி சந்நிதி
O ஆஞ்சநேயர் சந்நிதி
P அனுப்புமண்டபம்
Q மகாலட்சுமி சந்நிதி
R கல்யாண மண்டபம்
S நந்தி

இருபத்தொரு நரகங்களினின்றும் மீள முடியாது. இராம சேதுவைப்போன்ற புனித தீர்த்தங்களில் மூன்ருண்டுகள் நீராடினுலும் தப்ப முடியாது.

(13) பிரம்மாண்ட புராணம்: (துலா புருஷாதி பிரதிக்ரகப் பிராயச்சித்தம்)

சேது போன்ற புண்ணிய தலங்களிலும், கிரகண காலங்களிலும் ஒருவனுடைய அதிலும் ஒரு அரசனுடைய நிறைக்குச் சமமான பொன் அல்லது வெள்ளியைத் தானமாக பிராமணன் பெறுவானுனல் அவன் அரக்கனுகி ஆயிரம் ஆண்டுகள் கண் தெரியாமலும் அமைதியில்லாமலும் துன்பப்படுவான்.

(14) மத்ச்ய புராணம்: (தேனு பிரதிக்ரகப் பிராயச்சித்தம்).

பேராசைகொண்டு பசுவுருவத்தைத் தானமாகப் பெற்று உலக இன்பத்திலீடுபட்ட பிராமணன் யாகத்தினுல் தூய்மைப்படுத்திக்கொள்ளாவிட்டால் நரகத்தில் துன்பப்படுவான். பாவத்தை நீக்க, கங்கை, கோதாவிரி, கிருஷ்ணை, காவிரி, துங்கபத்திரை, தனுஷ்கோடி, கந்தமாதன பர்வதம் இவைகளில் அருகிலுள்ள ஏதாவதொன்றுக்குச் சென்று பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும்.

## சுமிருதிகள்

(15) மனு சுமிருதி: (சண்டாளிகமன பிராயசித்தம்)

குருவின் ஆணைபெற்று ஒருவன் உடனே தனுஷ்கோடிக்குச் செல்லவேண்டும்.

(16) காலவ சுமிருதி:

கங்கை, சேது, பிரயாகை, கோதாவிரி, கிருஷ்ணை, காவிரி, மகாநதி இவைகளில் ஏதேனும் ஒன்றைப்பார்த்தாலும் நீராடினுலும் வீடுபேற்றை யடையலாம்.

(17) கௌத சுமிருதி:

பாவம் செய்தவன் தூய்மைபெற நாள்தோறும் காலையில் ஒருமாத காலத்திற்கு தனுஷ்கோடியில் நீராட வேண்டும்.

(18) தேவல சுமிருதி:

எல்லா தீர்த்தங்களின் மகிமையும் கூடிய இராமலிங்க தனுஷ்கோடியும், கந்தமாதன பர்வதமும் தென்கிழக்கே இருக்கின்றன.

(19) மரீசி சுமிருதி:

ஒருவன் வாழ்க்கையுள் அறுபது வயதுக்குள்ளாக வாவது ஸ்ரீசைலம், வெங்கடாத்திரி (திருப்பதி), காஞ்சிபுரம், ஸ்ரீரங்கம், இராமேசுவரம், தனுஷ்கோடி இவைகளில் ஒன்றுக்கேனும் போகாமலிருந்தால் மறுபிறப்பில் கழுதையாகப் பிறப்பான்.

(20) பராசர சுமிருதி:

பிரமஹத்தி பாவம் நீங்க சேது யாத்திரை செய்ய வேண்டும். தூய உள்ளத்தோடு நீராடவேண்டும்.

## பிற்காலத் தோத்திரங்கள்

(21) வேதாந்த தேசிகரின் தயாசதகம்:

கடலை இரண்டாக்கிக் கட்டப்பட்ட அணையான சேது வைப்பார்த்தால் எல்லா பாவங்களும் நீங்கும்.

(22) வெங்கடாத்திரியின் விசுவகுணதர்சம்:

திக்கற்றோரையும் பாவம் செய்தோரையும் காப்பாற்றவும், அறியாமை இருளை அகற்றவும், இலங்கைக்குச் சென்று அரக்கரை அழித்து சீதையை மீட்கவும், தன் குலப்பெருமையை நிலைநாட்டவும், மக்கள் பேரின்பமடையவும் இராகவனால் கட்டப்பட்ட சேதுவை நாம் வணங்குவோமாக.

(மேற்கண்டவை வானமாமலைப் பிள்ளை எழுதிய "சேதுவும் இராமேசுவரமும்" என்ற ஆங்கில நூலிலிருந்து தொகுக்கப்பட்டது).

(23) **துளசிதாசர் இராமாயணம்:**

புஷ்பக விமானம் வானிற் கிளம்பியது. இராமர் சீதைக்கு இடங்களைக் காட்டி நிகழ்ச்சிகளைக் கூறினர். "சீதையே! இங்குதான் அணை கட்டப்பட்டது. இங்குதான் ஸ்ரீசிவபிரானை (இராமேசுவரம்) நிறுவினேன், பூசித்தேன்" என்று கூறியவாறே இராமரும் சீதையும் மற்றவரும் இராமநாதப் பிரபுவை வணங்கினர்.

---

## பிற்சேர்க்கை XI

## இராமேசுவரத்தில் தங்குவதற்குரிய விடுதிகள்

| பெயர்—தெரு | வசதிகள் |
|---|---|
| 1. மகாபீர் தர்மசாலை (புகைவண்டி நிலையத்தருகில்) | தங்குவதற்கு அறைகள் உண்டு. அறை ஒன்றுக்கு வாடகை 50 புதுக்காசுகள். மாடி அறை ஒன்றுக்கு ரூபாய் ஒன்று. மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய். இராமநாதபுரம் நாட்டாண்மைக்கழக ஆட்சிக்குட்பட்டது. |
| 2. தூத்வாலா தர்மசாலை (இரயில்வே பீடர்ரோடு) | வடநாட்டார் மட்டும் தங்கலாம். அறைகளுக்கு வாடகையில்லை. மின்சாரவிளக்குகள். கெங்காராம் பீதாம்பரபண்டா நிர்வாகத்திலுள்ளது. |
| 3. நந்தகோபால்சத்திரம் (இராமதீர்த்தம் தெரு) | தங்க வசதியில்லை. இராமநாதபுரம் நாட்டாண்மைக் கழக ஆட்சிக்குட்பட்டது. |

| பெயர்—தெரு | வசதிகள் |
|---|---|
| 4. தஞ்சாவூர் மகாராஜா சத்திரம். (மேலத்தெரு) | இங்கு தங்கலாம். பகலில் ஏழைகள் 12 பேருக்குச் சாப்பாடு உண்டு. |
| 5. கண்டனூர் சி. ராம. சொ. இராமநாதன் செட்டியார் சதாவிர்த்திசத்திரம் (மேலத்தெரு) | வடநாட்டு பைராவிகளுக்கு சதாவிர்த்தி கொடுக்கப்படுகிறது. தங்கும் வசதியில்லை. |
| 6. ஆரியவைசிய சத்திரம் (மேலத்தெரு) | ஆரியவைசியர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 7. ரெட்டியார் மடம் (மேலத்தெரு) | ரெட்டியார்கள்மட்டும்தங்கலாம். |
| 8. பென்சிலால் அபீர்சந்த் தர்மசாலை (மேலத்தெரு) | வடநாட்டார் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 9 பகவான்தாஸ் பாக்லா சத்திரம் (திட்டகுடி) | இங்குதங்கலாம், மின்சாரவிளக்குகள் உண்டு. |
| 10. ஜம்மு சத்திரம் (நடுத்தெரு) | காஷ்மீர் மக்கள் மட்டும் தங்கலாம். |
| 11. இராமநாதபுரம்மகாராஜா சத்திரம். (மேலக்கோபுரவாசல்) | இங்கு தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. காலையில் ஏழைகளுக்கு கஞ்சி தர்மம் உண்டு. |
| 12. வெங்கட்டராயர் சத்திரம் (மேலரதவீதி) | இங்கு தங்கலாம். பகல் உணவு உண்டு. மின்சார விளக்குகள் உண்டு. |
| 13. குஜராத்தி சத்திரம் (வடக்கு ரதவீதி) | வடநாட்டார் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |

| பெயர்-தெரு | வசதிகள் |
|---|---|
| 14. உடுப்பி நரசிம்மராவ் சத்திரம் (வடக்கு ரதவீதி) | உடுப்பி பிராமணர்கள் மட்டும் தங்கலாம். மின்சாரவிளக்குகள் உண்டு. |
| 15. காசி மடம் (நடுத்தெரு) | கொங்கனி பிராமணர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 16. யாழ்ப்பாணத்தார் மடம் (வடக்கு ரதவீதி) | இங்கு தங்கலாம். |
| 17. மதுரை வி. எஸ்.கே.முத்து ராமய்யர் சத்திரம் (கீழ ரதவீதி) | சௌராஷ்டிர பிராமணர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 18. குசல்வா சத்திரம் (தெற்கு ரதவீதி) | சௌராஷ்டிர பிராமணர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 19. நகரத்தார் விடுதி (தெற்கு ரதவீதி) | நகரத்தார்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 20. ராம்குமார் சத்திரம் (மேல ரதவீதி) | இங்கு தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 21. பரமக்குடி அய்யாசாமி செட்டியார் சத்திரம் (மேலரதவீதி) | காசுக்கார செட்டியார்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 22. நாடார்கள் சத்திரம் (புதுத்தெரு) | இங்கு நாடார்கள் மட்டும் தங்கலாம். |
| 23. அகல்யாபாய் சத்திரம் (கீழ்ச்சந்நிதித்தெரு) | இங்கு வடநாட்டார் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |

| பெயர்-தெரு | வசதிகள் |
|---|---|
| 24. திருப்பனந்தாள் காசிமடம் (கீழ்ச்சந்நிதி தெரு) | இங்கு தங்கலாம். பகல் உணவு உண்டு. மின்சார விளக்குகள் உண்டு. |
| 25. சித்திர காங்கையா தூர்வாசுலு சத்திரம் (வர்த்தகர் தெரு) | தெலுங்கு ஆந்திரர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 26. அரங்கையாசெட்டியார் சத்திரம் (வர்த்தகர் தெரு) | தெலுங்கு ஆந்திரர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 27. பெஜவாடா சுண்டூர் வெங்கிட்ட ரெட்டிசத்திரம், (வர்த்தகர் தெரு) | ஆந்திரர்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் இல்லை. |
| 28. சேட் மாணிக் செண்ட் கோரன்தாஸ் ஆமதாபாத் தர்மசாலை, (மேலத்தெரு) | வடநாட்டார்கள் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் இல்லை. |
| 29. கர்லாபாடிசாமளாஅம்மாள் சத்திரம் (மேலத்தெரு) | ஆந்திரர்களும் வைசியரும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 30. இராஜா சிவபாக்ஸ் பாக்லா சத்திரம் (மேலத்தெரு) | வடநாட்டார் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 31. மிர்சாபூர்பிண்ணனிசத்திரம் (நடுத்தெரு) | வடநாட்டார் மட்டும் தங்கலாம். மின்சார விளக்குகள் உண்டு. |
| 32. தெற்கு ரெஸ்ட் ஹவுஸ்(3) (கீழ ரதவீதி) | மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய் உண்டு. நாள் 1-க்கு அறை ஒன்றுக்கு வாடகை ரூபாய் இரண்டு. இராமேசுவரம் தேவஸ்தானத்திற்குப் பாத்தியம். |

| பெயர்-தெரு | வசதிகள் |
|---|---|
| 33. திருப்பணிபங்களா (கீழ ரதவீதி) | மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய் உண்டு. நாள் ஒன்றுக்கு ரூ. 7-50/- வாடகை. இராமேஸ்வரம் தேவஸ்தானத்திற்குப் பாத்தியம். |
| 34. இராம மந்திரம் பங்களா (கீழ ரதவீதி) | மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய் உண்டு. நாள்ஒன்றுக்கு ரூபாய் ஐந்து வாடகை. இராமேசுவரம் தேவஸ்தானத்திற்குப் பாத்தியம். |
| 35. விளாங்கொல்லை ரெஸ்ட் ஹவுஸ். (2) (வடக்கு ரதவீதி) | மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய் உண்டு. நாள் ஒன்றுக்கு ரூபாய் இரண்டு வாடகை. இராமேசுவரம் தேவஸ்தானத்திற்குப் பாத்தியம். |
| 36. மனுபாய் தர்மசாலை (வடக்கு ரத வீதி) | அறை ஒன்றுக்கு ரூபாய் ஒன்று வாடகை. இதில் 6 அறைகள் இருக்கின்றன. இராமேசுவரம் தேவஸ்தானத்திற்குப் பாத்தியம். |

# யாத்திரை செய்வோர்க்கு அறிவிப்பு

1. இராமேசுவரம் சேது யாத்திரை ஓர் ஏழை அடியவருக்கும் இயன்ற செயலாக இருக்கவேண்டும் என்பது கோயில் நிருவாக அலுவலர்களின் பெருவிருப்பமாகும்.

2. யாரும் இராமேசுவரத்தில் உள்ள இலவச அறச்சாலைகளில் தங்கி, இறை வழிபாடு, புண்ணிய நீர்முழுக்கு ஆகியவற்றைக் குறைந்த செலவில் முடித்துச் சேது யாத்திரையை எளிதில் நிறைவேற்றலாம்.

3. கோயிலில் எழுந்தருளியிருக்கும் தெய்வங்களுக்குக் காணிக்கை செலுத்துவோர், அவ்வத்தெய்வங்களின் திருமுன்னர் இருக்கும் உண்டியல்களில் செலுத்த வேண்டும்.

4. கோயில் நிருவாக ஊழியர்கள் தமது கடமையாகச் செய்யும் தொண்டுக்காக அவர்களுக்கு எவ்வகையான பரிசும் அளிக்கவேண்டியதில்லை.

5. இராமேசுவரம் கோயில் நிருவாகம், வழிபாடு ஆகியவற்றில் உள்ளூர்ப் புரோகிதர்களுக்கும் பண்டாக்களுக்கும் எவ்வகையான உரிமையும் இல்லை. கோயிலில் இறை வழிபாட்டை நடத்திவைக்கும் அருச்சகர்கள் கோயில் நிருவாக நிலையத்தில் ஊதியம் பெறும் ஊழியர்கள் ஆவார்கள். இறைவழிபாடு முதலியவற்றைப் விளக்கமாக அறிய விரும்புவோர் கோயில் அதிகாரிகளைக் கேட்டு அறிந்து கொள்ளலாம்.

6. கோயில் ஆட்சியின் பலவகையான தொண்டுகளின் தரத்தை உயர்த்தக்கூடிய எவ்வகையான ஆலோசனைகளும் நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டு இயன்ற அளவு நடைமுறைக்குக் கொண்டு வரப்படும்.

# ஆதரவு நூல்கள்

1. சிவஸ்தல மஞ்சரி—வ. த. சுப்பிரமணியபிள்ளை
2. சிவஸ்தல யாத்திரை மஞ்சரி—ம. பாலசுப்பிர மணிய முதலியார்.
3. சிவவிஷ்ணு க்ஷேத்திர விளக்கம்—ரா. சீனிவாச அய்யர்.
4. இந்திய ஸ்தலயாத்திரை மான்மியம்— T. B தாஸ்ராவ்.
5. திவ்வியதேசயாத்திரையின் சரித்திரம் — பகடால நரசிம்மலு நாயுடு.
6. தென்இந்தியக் கோயில்கள்—P. V. ஜகதீசய்யர்.
7. சிவாலயங்கள் இந்தியாவிலும் அப்பாலும்— பம்மல் சம்பந்தமுதலியார்.
8. சேதுப்புராணம்—நிரம்பஅழகிய தேசிகர்.
9. சேதுப்புராண வசனம்—முத்துவிஜயம் பிள்ளை.
10. சேதுவும் இராமேசுவரமும் (ஆங்கிலத்தில்)— N. வானமாமலைப்பிள்ளை.
11. தேவையுலா-பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்.
12. திருவிளையாடற்புராணம்—பரஞ்சோதிமுனிவர்,
13. மலைவளர்காதலிப்பதிகம்—தாயுமானவர்
14. தேவாரம்—அப்பர், சம்பந்தர்.
15. திருப்புகழ்—அருணகிரிநாதர்.
16. பெரியபுராணம்—சேக்கிழார்.
17. இராமாயணம்—கம்பர்.
18. சென்னை மாநிலக்கல்வெட்டுக்கள்— V. அரங்காச்சாரியர்.

